4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்:எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 7-10-73 ஞாயிறு மலர் 235

## காங்கிரஸ் அமைச்சர் ரூ. 90 லட்சம் அமுக்கினர்

ஜெய்ப்பூர், அக். 6—

பஞ்ச நிவாரண வேலைகளுக்கு ஒதுக்கப்பட்ட ரூ. 1 கோடியில், 90 லட்சத்தை ராஜஸ்தான் மாநில பஞ்ச நிவாரண அமைச்சர் பரசுராம மதினு அமுக்கி விட்டார்.

இது குறித்து சட்டமன்றத்தில் கேள்விகள் கிளம்பி ஏகப்பட்ட ரகளை நடந்தது. சி. பி. ஐ விசாரணை நடத்த வேண்டுமென்று காங்கிரஸ் எம். எல். ஏ.க்களே வற்புறுத்தினர்.

## பி. ராமமூர்த்தி நிகழ்ச்சிகள்



அக்: 14 குமரி மாவட்டம்
15 நெல்லை
18 திருச்சி
19 சேலம்
20 வடாற்காடு
21 சென்னை—செங்கற்பட்டு

### சென்னையில்

## அமெரிக்கத் தூதரகம் முன் ஆர்ப்பாட்டம்

## சிலியில் செய்த சதிக்கு கண்டனம்

சென்னை, அக். 6—

சிலி நாட்டில் அமெரிக்கத் தலையீட்டைக் கண்டித்து சென்னையில் உள்ள அமெரிக்கத் தூதரகம் முன் ஆர்ப்பாட்டம நடந்தது.

கடந்த 3-ந் தேதியன்று மாலையில் நடந்த இந்த ஆர்ப்பாட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி ஐ டி யூ, இந்திய மாணவர் சங்கம் ஆகியவற்றின் சென்னை— செங்கை மாவட்டக் குழுக்கள் கூட்டாக ஏற்பாடு செய்திருந்தன.

ஆர்ப்பாட்டத்துக்கு முன்னதாக மாலை 5 மணியளவில் மவுண்ட்ரோடு நேபியர் பூங்காவிலிருந்து ஊர்வலம் புறப்பட்டது. கட்சித் தோழர்களும், பெண்களும் தொழிலாளர்களும், மாணவர்களுமாக நூற்றுக்கணக்கான தோழர்கள் கலந்து கொண்டனர். ஊர்வலம அமெரிக்கத் தூதரகத்தை அடைந்தது. அங்கு சிலியில் அமெரிக்கத்தலையீட்டையும் சதியையும் கண்டித்தும் இராணுவ வெறியர்களால் மக்கள் அரசு கவிழ்க்கப் பட்டதையும் ஜனதிபதி டாக்டர் அலெண்டே படுகொலை செய்யப்பட்டதையும் கண்டித்தும் உணர்ச்சி மிக்க முழக்கங்கள் எழுப்பப் பட்டன.

பின்னர் நடந்த கூட்டத்தில் கட்சியின் மாவட்டச் செயலாளர் தோழர் பி ஆர் பரமேஸ்வரன் பேசும் போது, சிலி நாட்டில் இராணுவமும். அமெரிக்க ஏகாதிபத்தியமும் நடத்திவரும் படுகொலைகளையும் ஏனைய நாடுகளில் விடுதலைக்காக நடைபெற்றுவரும் போராட்டங்களையும் விளக்கினர்.

அடுத்து, சி ஐ டி யூ சார்பில் டி கணேசன், மாணவர் சங்கம் சார்பில் எஸ் ஜெயராமன் ஆகிய தோழர்கள் பேசினர்.

இந்த இதழின் 3-ம் பக்கத்தில் "சிலி நாட்டில் நிகழ்ந்தவை"

சிலியில், டாக்டர் சால்வடார் அலெண்டே தலைமையில் மக்கள் ஐக்கிய அணி அரசு அமைந்த 1970 செப்4-ந் தேதி முதல் அமெரிக்க உதவியுடன் இராணுவ வெறியர்கள் டாக்டர் அலெண்டேயைச்சுட்டுக்கொன்று மக்கள் ஐக்கிய அணி அரசைக்கவிழ்க்க, நடந்த நிகழ்ச்சிகளை தொகுத்துக் கூறும் கட்டுரை.

# அரிசன மக்களுக்கு இழைக்கப்படும் அநீதி

## இந்தியாவெங்கும் இயக்கம் நடத்த சி. ஐ. டி. யூ. முடிவு

புதுடில்லி, அக் 6—

நாடு முழுவதும் ஹரிஜன மக்களுக்கு இழைக்கப்பட்டு வரும் கொடுமைகளை எதிர்த்து, தொழிலாளி வர்க்கம் ஒன்றுபட்டு கண்டன இயக்கம் நடத்த வேண்டுமென்று இந்திய தொழிற்சங்க மையம் (சி ஐ டி யூ) அறைகூவல் விடுத்துள்ளது.

ஹரிஜனங்களுக்கு எதிராக மனிதத் தன்மையற்ற குரூரச் செயல்களைப் புரிந்து வரும் மிருகக் கூட்டத்தைக் கண்டித்து, அரசியல் வேறுபாடுகள் எதுவுமில்லாமல், அனைத்து தொழிலாளர்களும் தொழிற்சங்கங்களும் ஒன்றுபட்டு, இந்திய முழுவதும் ஒரு கண்டன நாள் அனுஷ்டிக்க வேண்டுமென்றும் சி ஐ டி யூ தீர்மானித்துள்ளது.

சி ஐ டி யூ. வின் காரியக் கமிட்டிக் கூட்டம் இம்மாதம் 3, 4, 5, தேதிகளில் சி ஐ டி யூ, தலைவர் தோழர் பி. டி ரணதிவே, தலைமையில் நடைபெற்றது.

### கூட்டு இயக்கம்

அரிஜன மக்களுக்கு எதிராக இழைக்கப்பட்டு வரும் கொடூரங்களைக் கண்டித்து ஒரு கண்டன நாள் நடத்துவதற்கு அரசியல் வேறுபாடு இன்றி அனைத்து மத்திய தொழிற்சங்கங்களும் கூட்டாக முன்வர வேண்டுமென்றும் மத்திய தொழிற்சங்கங்களின் தலைவர்களை அணுகி, இது குறித்து பேசுவதற்கு சி ஐ டி யூ வின் பொதுச் செயலளர் தோழர் பி ராமமூர்த்திக்கு காரியக் கமிட்டி பொறுப்பளித்தது.

### பி. டி. ஆர். கண்டனம்

காரியக் கமிட்டிக் கூட்டத்தை துவக்கி வைத்து தோழர் பி டி ரணதிவே பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்.

"இன்று நாடு முழுவதும் தொழிற்சங்க இயக்கத்துக்கு சவால் விடுக்கப்பட்டுள்ளது, அரிஜன மக்களை அடித்துக் கொல்லுவதும், சித்திரவதைபுரிவதும், அவர்களது வீடுகளைச் சூறையாடுவதும், அவர்களது பெண்களை மானபங்கப் படுத்துவதும் என்றுமில்லாதவாறு சமீப மாதங்களில் அதிகரித்துள்ளது

பாதிக்கப்பட்ட அரிஜன மக்களுக்கு ஆதரவாகவும் அவர்களுக்கு கொடுமை புரியும் காதகர்களுக்கு எதிராகவும் தொழிலாளி வர்க்கம் ஒன்றுபட்டு ஆர்த்தெழ வேண்டும். எவ்வித வேறுபாடுமில்லாமல் அனைவரும் கூட்டாக இயக்கம் நடத்தி இந்தச் சவாலை ஏற்றுக் கொள்ளவேண்டும்?-என்று கூறினர்.

### தேவை அடிப்படையில் ஊதியம் வேண்டும்

ரூபாயின் மதிப்பு வெகு வேகமாக வீழ்ச்சியுற்று, உண்மைச் சம்பளம் குறைந்து கொண்டிருக்கும் இச்சமயத்தில்- தேவை அடிப்படையில் சம்பளம் கொடுக்கப்படாக இன்றைய நிலைமையில் தொழிலாளி வர்க்கமும் நடுத்தர மக்களும் தங்களது வாழ்க்கையைப் பாதுகாக்க,ஒன்று திரண்டு போராட வேண்டிய அவசியத்தையும் காரியக்கமிட்டி சுட்டிக்காட்டியது.

உண்மைச் சம்பளம் குறைந்துவரும்இச்சயத்தில் உற்பத்தித்திறனை அதிகரிப்பது என்ற பேரால், வேலைச் சுமையை அதிகரிப்பதையும் தொழிலாளர்கள் எதிர்த்துப் போராட வேண்டுமென்றும் காரியக் கமிட்டி அறைகூவல் விடுத்தது.

மற்றும், மத்திய அரசு ஊழியர்கள், தேவை அடிப்படையில் ஊதியமும், விலைவாசிக்கேற்ற கிராக்கிப்படியும், போனசும் கேட்டு கிளர்ச்சி செய்து வருவதையும் காரியக்கமிட்டி ஆதரித்தது.

# தமிழகத்தில் மின்வெட்டு

## ஆட்சியாளரின் கையாலாகாமையே காரணம்

## சி. கோவிந்தராஜன் குற்றச்சாட்டு

சென்னை, அக். 5—

தற்போது தமிழகத்தில் தி மு க ஆட்சியினரால் புகுத்தப்பட்டுள்ள 15 சதவீத மின்வெட்டு செயற்கையானது என்றும், இந்த மின் வெட்டுக்கு மத்திய, மாநில அரசுகளின் கையாலாகாத் தனமும் நிர்வாகக் கோளாறுமே காரணம் என்றும் தமிழக மின் தொழிலாளர் மத்திய அமைப்பின் தலைவர் தோழர் சி. கோவிந்தராஜன் கூறுகிறார்.

இதுபற்றி அவர் தரும் விவரங்கள் வருமாறு:—

அக்டோபர் 1-ஆம் தேதி முதல் தமிழகத்தில் மீண்டும் 15 சதம் மின்சார வெட்டை அரசு திணித்துள்ளது இதனால் மீண்டும் பல லட்சக்கணக்கான தொழிலாளர்கள் முழு வேலையற்று, நடுத் தெருவிலே திண்டாடும் நிலை ஏற்பட்டுள்ளது உற்பத்தி பாதிக்கப்பட்டு பொருளாதார சீர்குலைவு ஏற்படுவதற்கு மீண்டும் வழி செய்கிறது.

இந்த மின்வெட்டு அவசியம்தானா? தவிர்த்திருக்க முடியாதா? அவசியமற்றது; தவிர்த்திருக்க முடியுமென்பதே நமது பதிலாகும், இந்த நிலைக்கு முழு பொறுப்பும் மத்திய-மாநில அரசுகளே.

### தேவை எவ்வளவு?

தமிழ்நாட்டில் மின்சார வெட்டு இல்லாமலிருக்க ஒரு நாளைக்கு 220 லட்சம் யூனிட்டு மின்சாரம் உற்பத்தி செய்தால் போதும். 15 சதம் வெட்டு என்பது எல்லா துறையிலும் இல்லை யென்பதுனால், சராசரி 10 சதம் வெட்டு என்று கணக்கில் கொண்டால் தினம் 20 லட்சம் யூனிட்டு பற்றுக்குறை என்று ஆகிறது. அதாவது ஒருநாளைக்கு 200 லட்சம் யூனிட்டுதான இன்று உற்பத்தி செய்யப் படுகிறது என்று கூறப்படுகிறது.

மின்சாரம் நீர் தேக்கத்திலிருந்தும், தர்மல் நிலையங்களிலிருந்தும் மட்டுமே இப்பொழுது உற்பத்தி செய்யப் படுகிறது. இப்பொழுது தண்ணீர் வறறி விட்டதென்று மின்சார வெட்டு கொண்டு வரவில்லை. தற்போதுள்ள தண்ணீர் வெட்டு ஏதுமில்லாமல் உபயோகப்படுத்தி விட்டால் அடுத்த ஆண்டு பிரவரிக்குள் சுத்தமாக அனைத்து நீர்த்தேக்கங்களிலும தண்ணீர் தீர்ந்து போகும் என்றும் அடுத்த பருவ மழை ஜூன், ஜூலை வரும் வரை சுமார் 4 அல்லது 5 மாதங்கள் பெரிய அளவு மின் வெட்டு கொண்டு வர வேண்டியிருக்கு மென்றும் அதைத் தடுக்கவே இந்த 15 சதம் வெட்டு தற்காப்பு என்றும் சொல்லப்படுகிறது.

### இது தவிர்க்க முடியும்

தர்மல் நிலையங்கள் (நெய்வேலி-மத்திய அரசு, என்னூர், பேசின்பிரிட்ஜ்-மாநில அரசு) மீது போதுமான கவனம் செலுத்த மத்திய மாநில அரசுகள் தொடர்ந்து தவறி வருவதினால் தான் இந்த சீர்கேடு.

| | உற்பத்தி செய்யும் சக்தி | தற்போது உற்பத்தியாவது | லட்ச யூனிட் |
|---|---|---|---|
| நெய்வேலி ... | 600 மெ. வா. | 200 மெ. வா. | 48 |
| என்னூர் ... | 340 மெ. வா | 45 மெ. வா. | 11 |
| பேசின் பிரிட்ஜ் ... | 90 மெ. வா. | 45 மெ. வா. | 11 |
| | | | 70 |

தேவையான 220 லட்சம் யூனிட்டில் தெர்மல் மூலம் 70 லட்சம் யூனிட்டே இப்பொழுது உறபத்தி செய்ய முடிகிறது. மிகுதியை தேக்கி பாதுகாகக வேண்டிய நீரைக்கொண்டு (15 சதம் வெட்டுள்ள நிலையிலும்) 130 லடசம யூனிட் உறபத்தி செய்ய வேண்டியுள்ளது. உண்மையில் தர்மல் மூலமாக 130 லட்சம் யூனிட்டையும் நீரின் மூலம் 90 லட்சம் என்று மாற்றம செய்திருகக முடியும். மின் வெட்டை தவிர்த்திருக்க முடியும். அடுத்த ஆணடு பிரவரிக்குப் பின்னுலும் தேக்கங்களில் நீரைச் சேமித்து வைக்கவும முடியும். எதிர்கால மின வெட்டிலிருந்தும் பாதுகாததுக் கொள்ளலாம்.

| | உற்பத்தி செய்யும் சக்தி | உற்பத்தி செய்ய முடியும் | லட்ச யூனிட் |
|---|---|---|---|
| நெய்வேலி | — 600 மெ. வா. | 300 மெ. வா. | 72 |
| எண்ணூர் | — 340 மெ. வா. | 200 மெ. வா. | 48 |
| பேசினபிரிட்ஜ் | — 90 மெ. வா. | 60 மெ. வா. | 13 |
| | | | 133 |

133 லட்சம் யூனிட் உற்பத்தி செய்யக்கூடிய தர்மல் மின்சாரம் 70 லட்சம் தான் உற்பத்தி செய்யக் காரணம் என்ன? மத்திய மாநில அரசுகளின் பொறுப்பற்ற போக்குகளும் நிர்வாகக் கோளாருகளுமே யாகும்.

### நெய்வேலி

600 மெ வா, உற்பத்தியுள்ள சாதனம் நெய்வேலியிலிருந்தும் தற்போது 200 மெ வா. தான் உற்பத்தி செய்யப்படுகிறது. பர்னேஸ் ஆயில் பயன்படுத்த வேண்டுமென்றும், இரண்டாவது நிலக்கரி சுரங்கத்தை துரிதப்படுத்த வேண்டுமென்றும், சென்ற மின் வெட்டின் போது எழுப்பிய ஆலோசனைகள் மததிய அரசின் "செவிடன்காதில் ஊதிய சங்காக" இருக்கிறது.

### பேசின் பிரிட்ஜ்

இங்கு 90 மெ. வா. உற்பததி செய்ய சாதனம் உள்ளது. இதன் முழு அளவையும் ஒருபோதும பயன்படுத்த முடியாத 'ஏட்டுச் சுறைக்காய்" தான் காரணம, இங்குள்ள மொத்த மூன்று கூலிங்டவரில் இரண்டின் ஆயுள் காலம் முடிந்துவிட்டது. மற்றொன்று பழுது பார்க்க வேண்டியுள்ளது. இதை முன் கூட்டியே எதிர்பார்க்க முடியாத அளவுக்கு மின் வாரிய நிர்வாகம் என்ன செய்து கொண்டிருந்தது?

### எண்ணூர்

எண்ணூர் திட்டம் முழுவதுமே பெரிய கோளாறு இருக்கிறது. இங்கு மொத்தம் 4 யூனிட்டுகள் இருக்கின்றன. முதல் யூனிட்டு (69 மெ வா உற்பத்தித திறன்) இதனது பர்னர் கோளாறு காரணமாக இந்த ஆண்டு ஆகஸ்ட், செப்டம்பர் 15-ம் தேதி வரை 20 மெ வா தான் உற்பத்தி செய்ய முடிந்தது. இப்பொழுதும் 40 மெ வா மேல் நகர முடியவில்லை. இரண்டாவது யூனிட (60 மெ வா உற்பததித்திறன்) இது ஓவர்ஹால் என்ற பெயரில் காண்டிராக்டர்களிடம் விடப்பட்டு இயங்காமல் சும்மா இருக்கிறது. 3-வது யூனிட் (110 மெ வா உற்பத்திததிறன்) கடந்த ஜூலை மாதம இறுதியில் 3 டிரான்ஸ்பர்மர்கள் எரிந்து போயின. இதை புனர் நிர்மானம் செய்ய மேலும் 6 மாத காலமாகும் என்று நம்பகப்படுகிறது அவ்வளவு ஆமை வேகம்!

### அம்மாவாசையும் அப்துல்காதரும்

எண்ணூரில் இவ்வளவு கோளாறுகளும் காரணம் என்ன? பொறுப்பானதும் தகுதி வாய்ந்ததுமான நிர்வாகம் இல்லை என்று பேசப் படுகிறது.

இந்தத் திட்டம் முழுவதையும் கவனிக்க ஒரு தலைமைப் பொறியாளர் இருக்கிறார். திரு ரஷித் அக்மத் என்பது இவர் பெயர். இவர் பொது மராமத்து இலாகாவில சிவில் இன்ஜினியராக இருந்தவர். மந்திரியின் சிபாரிசினுல் சிவில் இன்ஜினியர் எலக்டிரிகல் வேலையான எண்ணூர்கட்டுமான வேலையை கவனிககே விடப்பட்டராம். இப்பொழுது மந்திரி சாதிக்பாட்சாவின சிபார்சில் தலைமைப் பொறியாளராகப் பதவி உயர்வு பெற்ற இந்த சிவில் இன்ஜினியர். தொடர்ந்து எண்ணூரை மேற்பார்வை செய்து வருகிறார்.

அடுத்தது திரு எம் டி அரசு என்னும் மற்றொரு மெக்கானிகல் இனஜினியர் மந்திரி அன்பழகனுக்கு சொந்தக்காரர் என்று சொல்லபபடுகிறது. அவர் தான் எண்ணூரில்

(4-ம் பக்கம் பார்க்க)

### பர்மாவில்

## வலது கம்யூனிஸ்ட் தலைவர் முஸ்லீம் லீக்கில் சங்கமம்

பம்பாய், அக். 5—

மகாராஷ்டிர மாநிலத்தில் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கியத் தலைவர்களில் ஒருவரான முகமத் அலி காசிம் முஸ்லீம லீக் கட்சியில் சேர்ந்துள்ளார்.

## இந்தியா நோக்கி கோதுமை கப்பல்

புதுடில்லி, அக் 14—

அமெரிக்காவிடமிருந்து சோவியத்யூனியன் தனக்காக வாங்கிய கோதுமையில், 13 லட்சம் டன் கோதுமையை இந்தியா நோக்கி திசை திருப்பி அனுப்பியுள்ளது. இக்கோதுமைக் கப்பல் சென்னைத் துறைமுகத்தை அக்டோபர் 7-ம் தேதி வந்தடையும்.

சோவியத்யூனியன் அமெரிக்காவிடம் வாங்கும் மொத்தக் கோதுமையில் 20 லட்சம் டன் கோதுமை தருவதாக கூறியுள்ளது.

### டெம்பரவரி கேங் தொழிலாளர்களுக்கு

## ரூ. 75 தீபாவளி அட்வான்ஸ்

## மதுரை மாநகராட்சியின் சரித்திரத்தில் முதல் தடவையாக பெற்றனர்

மதுரை, அக் 5—

மதுரை மாநகராட்சியில் பணி புரியும் டெம்பரவரி கேங் தொழிலாளர்களுக்கு ரூ 75ம், நகரசுத்தி தொழிலாளர்களுக்கு ரூ 150ம் தீபாவளி அட்வான்சாக வழங்க மாநகராட்சி நிர்வாகம முன் வந்துள்ளது.

மாநகராட்சித் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட இயக்கத்தாலும், சி ஐ டி யூ சங்கத்தின் தீவிர முயற்சியினுலும் இந்த அட்வான்சை வழங்க மாநகராட்சி நிர்வாகம் இணங்கியுள்ளது.

டெம்பரவரி கேங் தொழிலாளர்களுக்கு அட்வான்ஸ என்று வழங்கப்படுவது, மதுரை மாநகராட்சியின் சரித்திரத்திலேயே இது தான் முதல் தடவையாகும்.

### விலை உயர்வுகளை கட்டுப்படுத்த

# உபரி தானியங்கள் அனைத்தையும் கொள்முதல் செய்க

## தொழிற்சங்கத் தலைவர்கள் வற்புறுத்தல்

புதுடெல்லி, அக் 5—

உணவு தானியங்கள் வைத்திருப்போரின் தேவைக்குப் போக மீதி இருக்கக்கூடியதும். மார்க்கெட்டுக்கு வர வேண்டியதுமான அனைத்து உபரி தானியங்களையும் கொள் முதல் செய்ய வேண்டும். அந்த உணவு தானியங்களை பொது மக்களுக்கு நியாயமான விலையில விநியோகம் செய்ய வேண்டும்.

இம்முறை ஒன்றுதான் நியாயமான பங்கீட்டு முறையை கடைப்பிடிக்கவும் அத்தியாவசியபொருட்களின் விலைகள் ஸ்திரத் தன்மையோடு இருக்கவும் சிறந்த வழி யாகும்.

இவ்வாறு டெல்லியில் நடைபெற்ற தேசிய உற்பத்திதிறன் கவுன்சில் கூட்டத்தில் கலந்து கொண்ட மத்திய தொழிற்சங்க அமைப்புகளின் பிரதிநிதிகள் வலியுறுத்தினர்.

### தொ. ச. பிரதிநிதிகள்

டில்லியில் கூடிய தேசிய உற்பததித்திறன் கவுன்சிலில் தொழிற்சங்கங்களின் சார்பில், பிராமமூர்த்தி (சி ஐ டி யூ) ஜார்ஜ் பெர்னுண்டஸ் (ஹெச் எம் பி), ஜதீன் சக்ரவர்ததி (யூ டி யூ சி) ஆகிய ஒன்பது தொழிற்சங்கங்களின் தலைவர்கள் கலந்துகொண்டனர்.

இக்கூட்டததிற்கு தேசிய உறபத்தி சக்தி கவுன்சிலின் சேர்மன் கே டி சாண்டி தலைமை வகித்தார்.

### அரிசி மில்கள்

மேலும் உபரித் தானியத்தில் குறைந்தபட்சம் 60 சத வீதத்தையாவது கொள் முதல் செய்ய வேண்டும், அவ்வாறு உணவு இறக்குமதியின் தேவையை கட்டுப் படுததும் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு பயிரிடப்படாத தரிசு நிலங்கள் நிலமற்ற விவசாயிகளால் வெள்ளாண்மை செய்யப்பட வேண்டும். அதேபோல், அரிசி மில்களும் தேசியமயமாக்கப்பட வேண்டும் என்று தொழிற் சங்கப் பிரதிநிதிகள் வலியுறுத்தினர்.

### ஏற்ற இறக்கங்கள்

அத்தியாவசிய பொருள்களின் விலைகளில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் உற்பத்தித்திறனை பாதிக்கக்கூடிய ஓர் முக்கியமான உண்மை. எனவே, துணி, எண்ணெ, எரிபொருள் இவைகளின் மீது கட்டுப்பாடுகள் கொண்டு வரப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டது.

தீக்கதிர்

# கள்ளமார்க்கெட் விலை அரசின் கொள்முதல் விலையா?

ஒரு குவிண்டால் நெல்லுக்கு சர்க்கார் கொடுக்கும் விலையை ரூ 70—ஆக உயர்த்துவதென்று மத்திய அரசு முடிவு செய்துள்ளது; அதே போல் கம்பு 72 சோளம் 70 கேள்வரகு 70 என்ற விகிதத்தில் கொள் முதல் விலைகள் உயர்த்தப்பட்டுள்ளன.

அரிசியாக கொள்முதல் செய்தால் அதற்கு ஒரு குவிண்டாலுக்கு ஆந்திராவில் 111 ரூபாய், பீகாரில் 119, ஹரியானவில் 117, மத்தியப் பிரதேசத்தில் 104, பஞ்சாபில் 117, உத்திரபிரதேசத்தில் 115, மேற்கு வங்கத்தில் 114 என்ற அடிப்படையில் கொள்முதல் செய்ய மத்திய அரசு முடிவு செய்துள்ளது,

தமிழ்நாட்டில் நெல்லுக்கு என்ன விலை? அரிசிக்கு என்ன விலை என இன்னும் அறிவிக்கப்பட வில்லை.

கருணாநிதியின் அரசு காங்கிரஸ் ஆட்சியின் பாதையில் இம்மியளவேனும் மாருமல் நடந்து வருகின்றகாரணத் தினல், இதே பாணியில் விலையை உயர்த்தி அறிவிக்கக் கூடும் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

கருணாநிதி ஆட்சியில் உணவுக் கொள்முதலை அநேகமாக கைவிட்டு விட்டதனல் கொள்முதல் விலையை அறிவித்தாலும் ஒன்றுதான் அறிவிக்காவிட்டாலும் ஒன்று தான்.

பகிரங்க மார்க்கெட் விலைதான் கருணாநிதி ஆட்சி யின் கொள்முதல் விலையாக இருக்கும்.

பீகார் மாநிலத்தில் ஒரு குவிண்டாலுக்கு 119 ரூபாய் கொடுக்கப்படவிருக்கிறது. ஒரு கிலோ அரிசி ஒரு ரூபாய் 19 காசு கொளமுதல் விலை. இதற்கு மேல் சரக்குச் செலவு, ஏற்றுமதி, இறக்குமதிச் செலவு, இடைத் தரகர் கமிஷன் எல்லாம் சேர்த்தால மேலும 20 காசிலிருந்து 30 காசு வரை கணக்கு கொடுப்பாகள் இதில் சந்தேகம் வேண்டாம்.

ஆக, ஒரு கிலோ அரிசி 1-40லிருந்து 1-50 வரைக் கும் விற்க மததிய அரசு முடிவு செய்துள்ளது.

இந்த அடிப்படையில், மக்களின் ஜீவாதாரத் தேவையாக உள்ள உணவு விலையில சென்ற ஓராண்டு, காலததில் மட்டும் பயங்கரமான விலை உயர்வு ஏறபட்டுள் ளது. இதற்கு நேரிடையான பொறுப்பாளி மத்திய அரசே!

சென்ற ஆண்டு ஒரு குவிண்டால் நெல்லுக்கு சர்க்கார் நிர்ணயித்த கொள் முதல் விலை ரூ 56 என்பதை மறந்துவிட வேண்டாம், இன்று ரூ, 70.

மத்திய ஆட்சியாளர் யாருடைய நண்பர்கள் யாரு டைய நலனை பாதுகாப்பவர் என்பதற்கு இது நேரிடை யான உதாரணம்.

உணவுக் கொள்முதல் விலையை உயர்த்தினல் சர்ச்கார் அதிகமான பணம் செலவளிக்க நேரிடுமே, இத ஞல் விலைவாசி உயருமே என்று கூறப்பட்ட விமரிசனத் துக்கு உணவு அமைச்சர் அகமது பதில் கூறியிருக்கிருர். "இந்த விலை உயர்வுக்குத் தக்கவாறு நியாய விலைக் கடை களிலும் விலை உயர்த்தி விற்கப்படும்" என்று அறிவித்தி ருக்கிருர்.

மக்கள் வயிற்றில் அடித்து நிலச்சுவான்தார்களின் வயிற்றை நிரப்புவதுதான் எங்கள் கொள்கை என இந்திராகாந்தியின் அமைச்சர் கூறியுள்ளார். வறுமையை ஒழிக்கப் போவதாக கூறிக் கொள்ளும் அமைச்சர் கொஞ் சங்கூட மானம் வெட்கமில்லாமல் இதைக் கூறுகிருர்.

கொள்முதல் விலையை இவ்வாறு பகிரங்கமாக உயர்த்திய பிறகாவது சர்க்காருக்குதேவையான 50லட்சம் டன் உணவை கொள்முதல்செய்யும் உத்திரவாதம்எதுவும் உண்டா என்ருல் அதுவுமில்லை. காரணம் நிலச்சுவான்தார் கள்ளமார்க்கெட்டில் விற்பதற்கு உரியதாக வைத்துள்ள தானியங்களை கட்டாயக் கொள்முதல் செய்ய திட்டம் எதுவும் இந்த ஆட்சி இடத்தில் இல்லையே.

அவர்கள் தயவை நம்பித்தானே கொள்முதலில் இறங்கவேண்டும்?

ரூ 70-ஐ விட அதிகமாக கள்ளமார்க்கெட்டில் விற்பனை செய்யும் வாய்ப்புள்ள இடங்களில் எந்த நிலச் சுவான்தார் சர்க்கார் நிர்ணயிக்கும் விலைக்கு கொடுக்கப் போகிருன்?

சிறுநிலக்காரர்களிடம் நிர்ப்பந்தம் செய்து கொள் முதல் செய்வதையே மத்திய, மாநில அரசுகளின் நடை முறை கொள்கையாகக் கொள்ளப்போகின்றன!

அரசின் கொள்முதல் விலை கள்ளமார்க்கெட் விலையை நோக்கி போகிறது. கள்ள மார்க்கெட்டில் விற்றுப் பழகிய நிலச்சுவான்தார்கள் அரசாங்கத்தை திருப்தி பார்க்கவே தயாராகவில்லை. விளைவு கள்ள மார்க்கெட் விலை அரசின் கொள்முதல் விலையாகி மக்கள் வஞ்சிக்கப்படுகிருர்கள்.

## எண்ணெ முதலாளிகளும் இந்திய அரசும்

மண்ணெண்ணெ, பெட்ரோல், டீசல் ஆகிய எண்ணெ வகைகளை உற்பத்தி செய்யும் மூன்று எண்ணெ கம்பெனிகளே எஸ்ஸோ, கால்டெக்ஸ், பர்மாஷெல் ஆகியவை. இவை அமெரிக்க பிரிட்டிஷ் முதலாளி களுக்குச் சொந்தமானவை.

சென்ற ஓராண்டு காலத்தில் 6 தடவை எண்ணெ விலைகளை உயர்த்திக்கொள்ள மத்திய அரசிடமிருந்து அனுமதி பெறுவதில் இம்மூன்று கம்பெனிகளும் வெற்றி பெற்றன.

ஒரு ரூபாய்க்கும் குறைவாகவுள்ள பெட்ரோல்விலை ரூபாய 70 காசாக உயர்த்திக்கொண்டனர்.

இந்த உயர்வும் போதாதென்று மேலும் உயர்த்திக் கொள்ள அனுமதிக்கவேண்டுமென்று இருகம்பெனிகளும் கேட்டுள்ளன. மேலும், 12.1 சதவீதம உயர்த்த அனு மதிக்க வேண்டுமென கால்டெக்ஸ் பர்மாஷெல் ஆகிய இரு கம்பெனிகளும் கோருகின்றன.

இதற்குக்காரணம் இறக்குமதி செய்யப்படும் ஒரு பேரல் கிரூடாயிலுக்கு (கச்சா எண்ணெ) 2 டாலர் 74 சென்ட ஆகிறது. அதே சமயத்தில் 3-வது கம்பெனியான எஸ்ஸோ தான் இறக்குமதி செய்யும் எண்ணெக்கு 2டாலர் 49 சென்ட கொடுத்தால் போதும் என்று கூறுகின்றது.

இதிலிருந்து பர்மா ஷெல்லும், கால்டெக்சும் வேண்டுமென்றே திட்டமிட்டு அரசாங்கத்தை நிர்ப்பந் தித்து உயர்ந்த விலையைப் பெறலாம் எனக் கருதுகின் றன. இன்றைய நெருக்கடி நிலையைப் பயன்படுத்தி கொள்ளையடிக்கச் செய்யும் முயற்சி இது.

இதே யோசனையை எஸ்ஸோ கம்பெனி முன் வைத்தாலும் ஆச்சரியமில்லை.

அன்னிய முதலாளிகள் எந்தக்கோரிக்கைகளை முன்வைத்தாலும் அவைகளை அங்கீகரிப்பதில் உறுதியாக உள்ள இந்திரா அரசிடம் பர்மா ஷெல்லும் கால்டெக்சும் வெற்றியடையாமல போகுமா என்ன?

எண்ணெ விலைகளை உயர்த்தி இந்திய பொருளா தாரத்தை சீரழிக்க எண்ணியுள்ள இந்த அன்னிய முதலாளிகளின் கோரிக்கைகளை எடுத்த எடுப்பிலே நிரா கரிக்கும் தைரியமில்லாத இந்திரா அரசு "எஸ்ஸோ கம் பெனி விலை உயர்வு கேட்காதபோது நீங்கள் (இரு கம் பெனிகள்) மட்டும் விலை உயர்வு கேட்பதேன்" என விளக் கம் கேட்கப் போகிறதாம்.

நாம் கேட்கிருேம், எஸ்ஸோ கம்பெனியும் சேர்ந்து கொண்டு இதே விலையுயர்வை கேட்டால் மத்திய அரசு விளக்கம் கோருவதில் அர்த்தம் இல்லாமல் போய் விடுமே.

கைப் புண்ணுக்கு கண்ணடிவேறு?

அன்னியக் கொள்ளைக்காரர்கள் இந்த நாட்டைக் கொள்ளையடிக்க திட்டமிட்டு சதி புரிகிருர்கள் என் பதைப் பார்க்க இந்திரா அரசு தவறுகிறது. அன்னிய மூலதனங்களை கண்டு நடுங்குகிறது.

மத்திய அரசு இந்தப் புதிய விலை உயர்வுக் கோரிக்கைகளை நிராகரிக்க வேண்டும்.

அன்னியக் கம்பெனிகளை தைரியமாக தேச வுடமையாக்கும் முடிவு எடுப்பது ஒன்றுதான் இவை களின் அநியாயக் கோரிக்கைகளுக்கு முடிவு காணும் வழி.

## காங்கிரசுக்கு மாற்றுன பலம் வாய்ந்த ஓர் அரசியல் சக்தி

# நான்கு வருடங்களுக்குப் பின்னர்

மத்தியிலும், மாநிலங்களிலும் தொடர்ச்சியாக ஆட்சி நடத்தி வந்த காங்கிரசின் அதிகார ஆதிக்கம் தகர்ந்து காங்கிரஸ் பிளவுபட்டு வருடங்கள் நான்கு ஓடி விட்டன.

இதன் ஒரு பகுதியாகவே இந்திய வெகுஜனமுன்னணி இடதுசாரி ஜனநாயக சக்திகளின் ஒற்றுமையும் சிதைந்தது.

காங்கிரஸ் பிளவு அசாதாரணமான முதல் கட்டத்தில் இடதுசாரிகளெல்லாம் இந்திராவின் தலைமையிலுள்ள புது காங்கிரஸ் மேற்கொண்ட சில நடவடிக்கைகளுக்கு ஒருமனதாகவே ஆதரவு அளித்தார்கள் அல்லவா!

இந்த ஆதரவின் பொருள் என்ன வென்றும் இந்த ஆதரவு எவ்வளவுதான் நீடிக்கும்என்பதுமான பிரச்சினைகளின் போது இடதுசாரி ஜனநாயக இயக்கத் திற்குள் பிளவு ஏற்பட்டது.

இதிலொரு பகுதியினர் 'காங்கிரஸ் பிளவு பட்டதை யொட்டி அதுவரை யிலும் இருந்த காங்கிரஸ் எதிர்ப்பு அரசியல் மறைந்து விட்டது என்று கருதினர்.

### இந்திரா காங்கிரஸ் உதயமும் வலது. கம்யூ. சேவையும்

பழைய ஆளும் காங்கிரசுக்குள்நடை பெற்ற முற்போக்கு பிற்போக்குப் போராட் டத்தின் சிகரந்தான் காங்கிரஸ் பிளவு என்றும் அவர்கள் கருதினர். இப் போ ராட்டத்தில் பிற்போக்காளர்களை வெளி யேற்றி முற்போக்கு சக்திகள் வெற்றி பெற்று விட்டதைத்தான் "இந்திரா காங்கிரசின் உதயம்" தெளிவு படுத்து கிறது என்றும் அவர்கள் வாதாடினர்.

இந்த கணிப்பின் அடிப்படையில் காங்கிரசுடன் ஒற்றுமை என்ற ஒரு புது சித்தாந்தத்திற்கு அவர்கள் வடிவைக் கொடுத்தனர்.

இதற்கான முன் முயற்சிகளை மேற் கொண்டவர்கள் வலது கம்யூனிஸ்ட் கட்சியும், பி.சோ. கட்சியும் தாம். கேரள, மேற்கு வங்க இடதுசாரி அரசுகளை கவிழ்த்து விட்டு அவற்றிற்குப் பதிலாக காங்கிரஸ் தலைமையிலான புது அரசுகள் நடைமுறையில் வரவும் நாடாளுமன்றத்தில் காங்கிரசுக்கு பெரும்பான்மை மெஜாரிட்டி கிடைக்கவும் அவ்விரு கட்சிகளுமே வழி வகுத்தனர்.

இப்பிரச்சனையில் வலது கம்யூனிஸ்ட் கட்சி அளித்த சிறப்புச் சேவையை அங்கீகரித்து அக்கட்சிக்கு சுமார் 2 - ஜன நாடாளுமன்ற சீட்டுகளையும் கேரளத்தில் மூன்று அமைச்சர் பதவிகளையும் கொடுக்க காங்கிரஸ் ஒத்துக்கொண்டது. இதற்கு பதிலுதவியாக காங்கிரசின் 'மக்கள் விரோத கொள்கைகளுக்கெல் லாம் 'முற்போக்கு சர்டிபிகேட்' டை வலது கம்யூனிஸ்ட் கட்சியும் அளித்தது.

இடதுசாரி ஜனநாயக இயக்கத்தி லேயே மற்றோர் பிரிவினர் இருந்தனர். பழைய காங்கரஸ் பிளவுபட்ட அரசியலை, குறிப்பிடத் தக்க எந்த மாற்றத்தையும் காங்கிரஸ் பிளவுபட்ட காரணம் காட்டி ஏற்படுத்த வேண்டியதில்லை என்று அவர்கள் வாதித்தனர்.

பழைய பிளவுபடாத காங்கிரசை எதிர்த்தது போல புதிய ஆளுங் காங்கிர சுக்கு எதிராகவும் எல்லா எதிர்கட்சிகளை யும் ஒன்றுபடுத்த வேண்டும் (வலதுசாரி எதிர்கட்சிகளையும் சேர்த்து) ஒன்று பட்டு புதுக் காங்கிரசை எதிர்க்க வேண்டும். இதுதான் அவர்களின் அணுகுமுறை. இந்த வாதத்தின் முன்னணியில் நின்றது எஸ். எஸ். பி. கட்சியாகும் 1971-ல் நடை பெற்ற நாடாளுமன்ற தேர்தலில் சிண்டி கேட்-ஜனசங்கம்-சுதந்திரா ஆகிய கட்சி கள் சேர்ந்து அமைத்த 'மகா முன்னணி' யில் எஸ். எஸ். பி. கட்சியும் சேர்ந்தது.

ஆனல் அந்தத் தோல்வியில் எஸ். எஸ் பி. (சம்யுக்த சோசலிஸ்ட் கட்சி)க்குக் கிடைத்த படிப்பினையையொட்டி அக் கொள்கையில் ஒரு மாற்றம் ஏற்படுத்த எஸ் எஸ் பி. தலைமை தயாரானது என் ருலும் இக் கொள்கையின் சில அம்சங் களை அவர்கள் தொடர்ந்து கடைப் பிடித்து வந்தனர்.

### வெவ்வேறு கணிப்பு

இந்த இரு சாரரின் கணிப்பிலிருந்து மாறுபட்டதொரு கணிப்பினைத்தான் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிகாங்கிரஸ் பிளவிலும் தொடர்ந்துள்ளவான அரசி யல் பிரச்சினைகளிலும் மேற்கொண்டது.

ஒருபக்கத்தில் ஆளுங் காங்கிரசுக் கும் மறுபக்கத்தில் வலதுசாரி எதிர்கட்சி களுக்கும் எதிராக இடதுசாரி ஜனநாயக சக்திகளை ஒன்றுபடுத்தி ஒரு முன்னணி அமைக்கவேண்டும் என்ற அடிப்படை கண்ணேட்டம்தான் மார்க்சிஸ்ட் கட் சிக்கு இருந்தது எனவே 1971-ல் நடை பெற்ற நாடாளுமன்ற தேர்தலிலும் 1972ல் நடைபெற்ற சட்டசபை தேர்தல்களிலும் கட்சி தனியாக நின்று போட்டியிட் டது.

இதுமட்டுமின்றி ஒரே வேளையில் இரு அரசியல் அணிகளுக்கெதிராகப் போராடவேண்டிய சிக்கலான நிலைமை யில் முற்றிலும் சரியானதோர் அரசியல் கொள்கை அமுல்படுத்துவதில் கட்சிக்கு சில சங்கடங்கள் ஏற்பட்டதான் செய் தது. ஆனல் அவற்றையெல்லாம் உட னடியாகச் சமாளிக்க நமது கட்சிக்கு முடிந்தது.

### மறு பரிசீலனை

1972 சட்டசபைத் தேர்தல்களுக்குப் பின்னர் நடைபெற்ற சம்பவத் தொடர்ச்சி கள் இடதுசாரி ஜனநாயக இயக்கத்தில் ஒட்டுமொத்தமாக, ஆழமான ஒரு மறு பரிசீலனை ஏற்பட வழி வகுத்தது.

வலது கம்யூனிஸ்டுகளுடன் காங் கிரஸ் அணிக்குச் சென்ற பி. சோ. கட்சி யினரில் பெரும்பான்மையோர் தாங்கள் கையாண்ட கொள்கையில் அடங்கி யிருந்த தவறுகளை உணர்ந்து அவற்றைத் திருத்தத் தொடங்கினர். இவர்களும், மகா முன்னணிக்குச் சென்ற தவறை உணர்ந்த எஸ் எஸ் பி கட்சியினரும் இணைந்து புதிய சோசலிஸ்ட் கட்சியை அமைத்தனர்.

இந்த புது எஸ் பி யிலேயே கருத்து வேற்றுமைகளும், பிளவுகளும் ஏற்பட்ட தென்றலும் கர்பூரி தாகூரின் தலைமை யிலுள்ள சோசலிஸ்டுகளும், ஜார்ஜ் பெர்னண்டஸின் தலைமையிலுள்ள சோச லிஸ்டுகளும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் தொடர்புகொண்டு கருத்து பரிமாற்றங்கள் நடத்தத் தொடங்கினர்.

இவ்வாறாக வலது கம்யூனிஸ்ட்கட்சியி லுள்ளேயும் ஏராளமானபிரதேச இடதுசாரி கட்சிகளிலும் தங்கள் தங்கள் கொள்கை யைப் பற்றி ஆழமாக மறு பரிசீலனை நடத்த வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

இந்த நிலைமையை கூடுதல் பிரயோ ஜனகரமாக முன்னேக்கிக் கொண்டு செல்வதற்கான ஆலோசனைதான் மார்க்

இ. எம். எஸ். நம்பூதிரிபாட்

சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சோச லிஸ்ட் கட்சியும் சேர்ந்து டெல்லியில் கூடி அங்கீகரித்த கூட்டறிக்கையில் முன் வைக்கப்பட்டுள்ளது.

அந்த கூட்டறிக்கையில் அடங்கி யுள்ள அடிப்படையான அரசியல் அணுகுமுறை இதுதான்:

**'ஆளும்காங்கிரசுக்கு மாற்றுக, ஒரு எதார்த்த சோசலிச சமூகம் கட்டி எழுப்புவதற்கு அடித்தளம் அமைக்கும் திறனுள்ள ஒரு இயக்கம் வளர்த்தெடுக்க வேண் டும்.'**

இந்த லட்சியத்துடன் ஒரு புதிய போராட்ட முன்னணி கட்டி எழுப்ப வேண்டுமென்றும் அதற்கு தயாராக உள்ள எல்லா அரசியல் கட்சிகளினு டையவும், பிரிவுகளினுடையவும் ஒத் துழைப்பைத் தேட வேண்டுமென்பதையுமே இரு கட்சிகளும் கூடி முடிவெடுத்துள் ளன.

### முன்னணி எதற்காக?

இந்த முன்னணியைக் கட்டி எழுப்பு வதில் இரு கட்சிகளும் அங்கீகரிக்கும் பொது அணுகுமுறையில் கவனத்துக் குரிய சில பொருட்களுண்டு.

முதலாவதாக இப்படிப்பட்ட முன் னணியைப் பற்றிய விமர்சனம் வரும் போது பலரும் சொல்வதைப் போல இது ஒரு தேர்தல் முன்னணி அல்ல. மாறாக "அரசின் மக்கள் விரோத கொள்கை களுக்கெதிராக வெகுஜனப் போராட்டங் கள் வாயிலாகவும் மக்களிடையே பரந்த பிரச்சாரங்கள் வாயிலாகவும் தெளிவான ஒரு 'நடைமுறை திட்டத்தை' முன் வைப் பது வாயிலாகவும் மட்டும் உயர்ந்து வர வேண்டிய ஒரு முன்னணிதான் இது.

இரண்டாவதாக இந்த வெகுஜனப் போராட்டங்களுக்கும் மக்களிடையே யான பிரச்சாரங்களுக்கும் நடைமுறை திட்டத்துக்கும் அடித்தளமாக இருக்க வேண்டிய சில பொது தத்துவங்களை கூட் டறிக்கையில் இருக்கின்றன. இதன்படியு துள்ள வேலை வாயிலாகக் கிடைக்கின்ற அனுபவங்களினுடையவும் இதில் ஒத்து ழைக்கத் தயாராகும் மற்ற கட்சிகளுட னும், பிரிவுகளுடனும் நடக்கின்ற கருத் துப் பரிமாற்றங்களின் விளைவாகவும் இந்த அணுகுமுறை இனியும் கூடுதல் செழிப் படையும்.

மூன்றுவதாக இந்த அணுகுமுறை யின் விளைவாக வெகுஜன போராட்டங் களுக்கும் மக்களிடையே பிரச்சாரமும் நடத்துவதற்காக முன்னணியில் அணிதிரளும் கட்சிகளுக்கும் பிரிவு(குரூப்)களுக்கும்இந்தமுன் னணியில் இடமிருக்கும். ஆனல் கூட்ட றிக்கையின் அடிப்படை அணுகுமுறைக்கு எதிரான வலதுசாரி—கூபுவாத அணு குமுறையுடன் இயங்கும் கட்சிகளுக்கும் பிரிவுகளுக்கும் இந்த முன்னணியில் இடம் கிடையாது.

நாலாவதாக, மனித சுதந்திரம், சுதந் திரமும் ஜனநாயகம் முறையிலுமான தோதல் போன்ற சிலகுறிப்பிட்ட பிரச்சினை களுக்காக நாடாளுமன்றத்திலும் சட்ட சபைகளிலும் வலதுசாரி கட்சிகளுடன் ஒத்துழைத்து செயல்படலாம் என்பதை இருகட்சிகளும் அங்கீகரித்து ஏற்றுக் கொள்கின்றன.

ஆனல் நாடாளுமன்றத்துக்கும், சட்டசபைகளுக்கும் வெளியே வலது- வகுப்புவாத கட்சிகளுடன் ஒத்துழைப்பது சம்பந்தமாக இருகட்சிகளுக்குமிடையே கருத்துவேற்றுமையுண்டு. நாடாளுமன்ற த்திலும், சட்டசபைகளிலும் செய்வதை போல வெளியேயும் மேற்சொன்ன குறிப் பிட்ட பிரச்சினைகளில் (அப்பிரச்சினைகளில் மட்டும்) வலதுசாரி, வகுப்புவாதகட்சிகளு டன் ஒத்துழைக்கலாம் என்றுசோசலிஸ்ட் கட்சி கருதுகிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியோ, அவர்களுடன் கூட்டுப் பிரச்சாரம் நடத்துவதும், இயக்கங்களில் ஈடுபடுவதும் மக்கள் இயக்கத்தை பாதிப் பதாகவே முடியும் என்று கருதுகிறது.

ஆளும் காங்கிரசினுடையவோ, மற்ற பூர்ஷ்வா கட்சிகளினுடையவோ 'வால்' என்ற நிலையில் தரம் தாழ விரும்பாத எல்லா இடதுசாரி ஜனநாயகக் கட்சி களும், பிரிவுகளும்,தனிநபர்களும் பொது வாக வரவேற்க வேண்டிய ஒரு அணுகு முறைதான் சோசலிஸ்ட் மார்க்சிஸ்ட் கூட்டறிக்கையில் அடங்கியுள்ளது, என் பதை எந்த நடுநிலையாளரும் ஒத்துக் கொள்வர்.

இதன் அடிப்படையில் வேலைகளை துவக்கி, அந்த வேலையிலிருந்து கிடைக் கின்ற அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு கருத்து பரிமாற்றங்களுடன் நடத்தி இடதுசாரி ஜனநாயக கட்சிகளும், பிரிவு களும் தயாராகுவோமேயானல் நான்கு வருடங்களுக்கு முன்னர் சிதைந்த இடது சாரி ஜனநாயக ஒற்றுமையை வெகு சீக்கிரம் சீரமைக்க முடியும்.

—தொடரும்

## ஆசிரியருக்கு...

### ஆக்கிரமிப்பு அகற்றப்படுமா?

ஐயா,

எனது ஊராட்சி மன்றத் தைச் சேர்ந்த மலையப்பாளை யம் கிராமத்தில் க. ச. 38/1 என் சாலைக்கு எதிர்புறம் நம்பியூர்—மலங்கரை ரோட் டுக்கு கீழ்புறம், சென்னி மலைக் கவுண்டர் பூமிக்கு மேற்குப்புறம், சின்னக் கவுண்டர் என்ற அழைக் கப்படும் கருப்பகவுண்டர் பூமிக்கு வடபுறம் உள்ளது புறம்போக்கு காலி இடம் இதன் அளவு 1 ஏக்கர் க. ச எண் 30/3 இந்த புறம் போக்கு இடத்தில் பள்ளிக் கூடம் கட்டுவதற்கு ஏற்க னவே பஞ்சாயத்தில் தீர்மா னிக்கப்பட்டுள்ளது இவ்வூ ரில் மேலும் அரசு அலுவல கங்கள், உயர்நிலை பள்ளிக் கூடம் என நிறைய கட்டி டங்கள் எதிர்காலத்தில் கட்ட வேண்டியுள்ளன. இந்த இடம் வருடா வருடம் மலையப்பாளையத்தில் உள்ள ஸ்ரீ முருகவேலாயுத சுவாமி தைப்பூச திருவிழா வின் போது நடைபெறும் 5 நாள் மாட்டுச் சந்தை கூடுவதற்கு கட்ட பெரிதும் உதவி வருகின்றது.

சற்றெழுது ஒலைக் கோயிலை சேர்ந்த முக் கியஸ்தர் ஒருவர், மேற்படி இடத்திற்கு தென் புறம் உள்ள ஒருவரது தோட்டத்தில் 35 சென்ட் நிலம் வாங்கியுள்ளார். அந்த பூமியோடு, நான் மேலே சொன்ன புறம் போக்கு பூமியையும் சுமார் 75 சென்ட் இணைத்து வேலி போட்டுவிட்டார்.

இந்தப் புறம்போக்குக்கு வேலி போட்டு இடத்தை அடைத்துவிட்டார்கள். அதன் மீது ஆக்கிரமிப்பும் செய்துவிட்டார்கள்.

நான் ஒலைக்கோயில் ஊராட்சி மன்றத்தலைவர் என்ற முறையில் ஆக்கிர மிப்புச் செய்த பிரமுகரிடம் அந்தப்புறம்போக்கு நிலத்தை ஆக்கிரமிப்பு செய்வதற்கு எதிர்ப்புத் தெரிவித்தேன். அவர் என்னுடைய எதிர்ப் பையும், ஊராரின் எதிர்ப் பையும் பொருட்படுத்தாமல் மேற்படி புறம்போக்கு இடத்தை ஆக் கிரமிப்பு செய்துவிட்டார். ஆகவே விரிவடைந்து வரும் இவ்வூரின் பொது அலுவலகமோ, பள்ளிக் கூடமோ கட்டப் புறம்போக்கு இடமே இல்லாமல் போய்விடும், எனவே மாநில கவர்னரும், அரசும்மற்ற அதிகாரிகளும் தயவுகூர்ந்து இந்த நியாயமான கோரிக்கை யின் மீது நல்ல முடிவும், நீதியும் வழங்குமாறு கேட் டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
ஏ. முத்துக்கவுண்டர்
தலைவர்
ஒலைக்கோயில் ஊராட்சி மன்றம்

## இந்துக்கல்லூரியில்

# மாணவர் நீக்கப்பட்டதற்கு மாணவர் சங்கம் கண்டனம்

பாளையங்கோட்டை, அக். 4—

நெல்லை இந்துக்கல்லூரி யிலும் திருவேங்கடம் உயர் நிலைப் பள்ளியிலும் மாண வர்கள் நீக்கப்பட்டதற்கு இந்திய மாணவர் சங்க (எஸ். எப். ஐ.) த்தின் நெல்லை மாவட்டக் குழு கண்டனம் தெரிவித்துள் ளது.

கடந்த செப். 30-ந் தேதி அன்று இந்திய மாணவர் சங்கத்தின் நெல்லை மாவட் டப் பிரதிநிதிகள் கூட்டம் கொக்கிரகுளத்தில் நடை பெற்றது. கூட்டத்தில் உறுப்பினர் எண்ணிக்கை, எதிர்கால வேலைகள் பற்றி ஆலோசிக்கப்பட்டது.

மாணவர் சங்கத்தின் நெல்லை மாவட்ட மாநாட்டை வருகிற அக் டோபர் 21-ம் தேதி நெல்லை யில் வைத்து நடத்துவது என்றும் மாநாட்டிற்கு தோழர் பாஸ்கரன், தோழர் என். ராம் ஆகியோரை அழைப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

கூட்டத்தில் கீழ்க்காணும் தீர்மானங்கள் நிறைவேற் றப்பட்டன:-

இந்துக்கல்லூரி மாணவ ரான பி.சுப்பிரமணியத்தை (முதலாண்டு பொருளா தாரம்) கல்லூரியைவிட்டு விலக்கியதை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக் கிறது. உடனே அம் மாண வரை கல்லூரியில் மீண்டும் சேர்த்துக்கொள்ளும்படி இக் கூட்டம் கோருகிறது.

திருவேங்கடம் உயர்நிலை பள்ளியில் இருந்து விலக்கப்பட்ட மாணவன் வரதராஜனை மீண்டும் பள்ளியில் சேர்த் துக்கொள்ள நடவடிக்கை எடுக்கும்படி இக்கூட்டம் மாவட்டக் கல்வி அதிகாரியைக் கேட்டுக் கொள்கிறது.

மாணவன் ஹரிதுநாதன் சில அமைக்க உடனே அனுமதி கொடுக்கும்படி மாவட்டக் கலெக்டரை இக் குழு கேட்டுக்கொள்கிறது.

# சிலி நாட்டில் நிகழ்ந்தவை

"சரணாகதிப்பாதை" என்ற தலைப்பில் பப்பாயிலிருந்து வெளிவரும் எக்கனாமிக் அண்ட் பொலிடிகல் வீக்லி, என்ற ஆங்கில வார ஏடு சிலி நாட்டில் நடைபெற்றஜனநாயக கவிழ்ப்புராணுவக் கலகம் பற்றி பின் வருமாறு எழுதுகிறது. தேதி வாரியாக இந்நிகழ்ச்சிகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**1970 செப்டம்பர் 4-ம் நாள்** சிலி நாட்டின் ஜனாதிபதி தேர்தல் 84 சதவீதம் வாக்குப்பதிவு. **மக்கள் ஐக்கிய அணியின்** வேட்பாளரான அலெண்டே மும்முனைப் போட்டியில் 36-3 சதவீதம் வாக்குகளை பெறுகிறார்.

தேசிய கட்சியின் வேட்பாளரான அலிசாண்டிரி என்பவர் 34·9 சதவீத வாசகுகளைப் பெறுகிறார்.

ரடோமிரோடாமிக என்ற கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர் 28.8 சதவீத வாக்குகளைப் பெறுகிறார்,

எந்த வேட்பாளரும் தனிப்பெரும் மெஜாரிட்டி பெறவில்லை. அக்காரணத்தினால சிலி நாட்டின் அரசியல் சட்டதிட்டப்படி நாடாளுமன்றம் அதிக வாக்குகள் பெற்ற இரு நபர்களிலிருந்து ஒருவரை தேர்ந்தெடுக்கிறது. சிலியின் பார்லிமெண்டால் அலெண்டே ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்படுகிறார்,

அலெண்டே ஜனாதிபதியானவுடன் செய்த முதல் பிரகடனம், சிலியில மார்க்சிஸ்ட் அரசாங்கம் அமையப்போவதில்லை. ஆறு கட்சிகளின் கூட்டணியான மக்கள் ஐக்கிய முன்னணி அரசாங்கம் தான் அமையப்போகிறது, அதன் திட்டம் சோசலிஸ்ட் திட்டமுமல்ல அல்லது தீவிரக் கட்சிகளின் திட்டமுமல்ல.

இந்த அறிவிப்புக்கு முதலாளி வர்க்கத்தினர் பீதியடைந்து பேங்குகளிலும் தொழில்களிலும் போட்டிருந்த பங்குகளை வாடஸ் வாங்கிக் கொள்ளாமல் இருப்பதற்காக செய்யப்பட்ட ஒரு அரசியல் தந்திரமாகவே அரசியல் வட்டாரங்கள் கருதின,

## 1970, அக். 4·

அலெண்டே பிரகடனம் செய்கிறார். அன்னியர்கள், குறிப்பாக, அமெரிககர்களின் கையிலுள்ள சிலி நாட்டின் அடிப்படையான தொழிற்சாதனங்களை அரசாங்கம் மேற்கொள்வது சிலி நாட்டின் பொருளாதார சமுதாயத்திற்கு அத்தியாவசியமானது என பிரகடனம் செய்தார்.

ஏகபோக முதலாளிகளின் சொத்துக்களை தேசியமயமாக்க வேண்டும் என பிரகடனம் செய்கிறார். விரிவான நிலச்சீர்திருத்தம், பேங்குகளை தேசியமயமாக்குதல், அன்னிய வியாபாரத்தை அரசே மேற்கொள்ளுதல் ஆகிய நடவடிக்கைகள் அத்தியாவசியமானது என அறிவிக்கிறார்.

அந்த அறிவிப்பில் கீழ்வருமாறு கூறுகிறார். "நாங்கள் பலாதகாரமாக எதையும எடுத்துக்கொள்ள விரும்பவில்லை. மாறாக. சிலி நாட்டின் சட்டதிட்டப்படியே தேசியமயமாக்க விரும்புகிறோம். ஒவ்வொரு பிரச்சினையையும் தனித்தனியாக, அதன் தன்மைகளை பரிசீலனை செய்து தகக நஷ்ட ஈடு செய்வதென முடிவு செய்வோம்" என்று அறிவிக்கிறார்.

## அக்டோபர் 22

அலெண்டேயின் தலைமையின் கீழ் இருந்து செயலாற்றிய சிலி ராணுவத்தின பிரதம தளபதி ரெனிஷ்சினிடர் என்பவர் வலதுசாரி சதிகாரர்களால் சுடப்பட்டு படுகாயமடைகிறார். சில நாட்களுக்குப் பிறகு மரணமடைகிறார்.

அலெண்டேயிக்கு எதிராக அந்த தளகர்த்தர் தன்னுடைய ராணுவத்தை பயன்படுதத மறுததற்காக வலதுசாரி பிற்போக்காளர்களால் பகிரங்கமாக குற்றம் சாட்டப்பட்டவர் இவர்.

## அக்டோபர் 24

அலெண்டே ஜனாதிபதியாக சிலியின் பார்லிமெண்டில் ஊர்ஜிதம் செய்து அவருக்கு கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த 85 உறுப்பினர்களும் அலெண்டேயை ஆதரித்த 80 மக்கள் ஐக்கிய உறுப்பினர்களும் ஆதரவு அளிககிறார்கள். இவர்கள் அல்லாமல் 40 உறுப்பினர்கள் வலதுசாரி கட்சிகளைச் சேர்ந்தவர்களும் உண்டு.

## அக்டோபர் 30

ஜனாதிபதியால் நியமிக்கப்படும் மந்திரிகள் யார் யார் என அறிவிக்கப்படுகிறார்கள். பிரதான மந்திரி பதவிகள் கம்யூனிஸ்ட்களுக்கும். சோசலிஸ்ட்களுக்கும் அளிக்கப்படுகின்றன, அலெண்டே சோசலிஸ்ட கட்சியைச்சார்ந்தவர்கள்.

## நவம்பர் 4

மக்கள் ஐக்கிய அணியின் அரசு அலெண்டேயின் தலைமையில் எல்லாப் பொறுப்புகளையும் ஏற்கிறது.

## நவம்பர் 5

ஜனாதிபதி அலெண்டேயின் முதல் பிரம்மாண்டமான மக்கள் அணிவகுப்பில் நடைபெறுகிறது. அதில் அலெண்டே தன்னுடைய அரசாங்கத்தின் திட்டம் என்ன என்பது பற்றி குறிப்பிடவில்லை.

ஜனநாயகத்தில் தனக்கு பரிபூரண நம்பிககை உள்ளது என்றும், சிலி நாட்டின் சர்வதேசிய பொறுப்புகளையெல்லாம் பொறுப்பேற்று நடத்தப்போவதாக அறிவிக்கிறார்,

## டிசம்பர்

சிலிநாட்டின் தென் பிராந்தியத்திலுள்ள முப்புச்சே இந்தியர்கள் என்ற சிலியன் ஆதிவாசிகளின் இயக்கம் பெரும் நிலச்சுவான்தார்களின் நிலங்களை கைப்பற்றி தங்களுக்குள்ளேயே பங்கு போட்டுக்கொள்கிறது.

எம்,ஐ ஆர். என்ற பெயரில் இயங்கி வந்த இம்மறைமுக இயக்கம் மக்கள் ஐக்கிய அரசை பொதுவாக ஆதரித்த போதிலும் அந்த அரசாங்கத்தில் பங்கு கொள்ளாமல் தனித்தே செயல்படுகிறது



பெரும் நிலச்சுவான்தார்களின் நிலத்தை கைப்பற்றிய பிறகு தெற்கு மாநிலங்களுக்குப் பறந்து செல்கிறார் அங்கு அந்த விவசாயிகளைச் சந்தித்து இனிமேல் இப்படிப்பட்ட காரியங்களை செய்யக் கூடாது என வலியுறுத்துகிறார்,

விவசாயக் கமிஷன் அவசர அவசரமாக அமைக்கப்படுகிறது. இதன் மூலம் அலெண்டேயும் விவசாய அமைச்சரும் பிரச்சினைகளை தீர்க்கப்போவதாக அறிவிக்கிறார்கள். அங்கு பேசிய பேச்சில் அலெண்டே, பெரு நிலச்சுவான்தார்களின் நிலத்தை விவசாயிகளே எடுத்துக் கொள்வதை என்னுடைய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால் அதே சமயம் பல்வேறு பகுதிகளில் விவசாயிகளை பாதிக்கும் பிரச்சினைகளில் என்னுடைய அரசாங்கம் ஆழ்ந்து பரிசீலிக்கும என்று கூறுகிறார்.

## டிசம்பர் 30

சிலி நாட்டின் பேங்குகள் தேசியமயமாக்கபபடுகின்றன அன்னியர்களின் பேங்குகளை தொடவில்லை. தாராளமாக நஷ்ட ஈடு கொடுக்கப்படுகிறது.

## 1971, ஜனவரி 1

சிலி நாட்டின் நிலக்கரிச் சுரங்கங்களையெல்லாம் தேசியமயமாக்க வகை செய்யும் மசோதா ஒன்றை சிலியின் பார்லிமெண்டில் அலெண்டே பிரேரேபிக்கிறார்.

## பிப்ரவரி

இடதுசாரி கட்சிகளிடமிருந்து ஒரு ஆலோசனை கூறப்படுகிறது. ஆயுதந் தாங்கிய மக்கள் படையொன்று உருவாக்கப்படவேண்டும என்று கூறுகிறாகள், இதை ஜனாதிபதி அலெண்டே நிராகரிககிறார். இதனால் இடதுசாரிகளிடையே ஒரு அதிருப்தி, ராணுவத் தளகர்த்தர்களுக்கு ஒரு மகிழ்ச்சி.

இடதுசாரிகளின் கோரிக்கைககளை நிராகரித்து அலெண்டே கூறிய பதில் பின் வருமாறு:—

"இன்றுள்ள முதலாளித்துவ ஜனநாயக சட்ட விதிமுறைக்குட்பட்டு நாம் இந்த சட்ட வரம்புக்குள் நின்று செயல்படுகிறோம் என்பது மிக முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயம். இந்த அடிப்படையிலேயே நாம் பிரமாணம் செய்துகொண்டு பதவியில் உள்ளோம். இந்த வாக்குறுதியை நாம் காப்பாற்றியாக வேண்டும" இது அலெண்டேயின் பதில்.

## மார்ச்

அலெண்டேயின் பொருளாதார அமைச்சரகம் அன்னிய மூலதனத்தை வரவேற்பதாக ஒரு அறிவிப்பு வெளியிடுகிறது. அந்த அறிவிப்புடன் ஒரு நிபந்தனையையும் வெளியிடுகிறது. "சிலியின் ஏற்றுமதிகளை அதிகரிக்கவும் தொழில் நுட்பத்திறமைகளை வெளியிலிருந்து கொண்டுவரவும் இங்கு வரும் அன்னிய மூலதனம் வழிசெய்யவேண்டும்" இதுவே அந்த நிபந்தனை.

இதே மாதத்தில் சிலி நாட்டின் பலதரப்பட்ட தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வுகளும் வழங்கப்படுகின்றன.

## ஏப்ரல்

இம்மாதத்தில் நாடெங்கும் நகர சபைத தேர்தல் நடக்கின்றன. இவற்றில், கம்யூனிஸ்டுகள், சோசலிஸ்டுகள், ரேடிகல் கட்சியினர் ஆகியோர் பங்கு கொண்ட மக்கள் ஐக்கிய அணி (அலெண்டே தலைமையிலுள்ளது) முன்பு பொதுத்தேர்தலில் பெற்ற வாக்குகளைவிட அதிகமான வாக்குகள் பெறுகிறது.

## ஜூலை

சிலி நாட்டில் செல்வ வளத்திற்கு பிரதான மூலப்பொருளாக இருந்த செம்புச் சுரங்கங்கள் தேசியமயமாக்கப்படுகின்றன. இதற்கு பார்லிமெண்டின் எல்லாத் தரப்பினரும் ஆதரவளிக்கின்றனர். இச்சுரங்கங்கள், அமெரிக்க முதலாளிகளுக்கு சொந்தமானவை.

அக்காரணத்தினால், அமெரிக்க அரசாங்கம் கோபமடைந்து சிலி அரசாங்கத்திற்காக நடவடிக்கை எடுக்கப்போவதாக மிரட்டுகிறது.

அதே சமயத்தில் சோவியத் யூனியன் அலெண்டே வுக்கு முன்பு இருந்த அரசாங்கத்துக்கு வாக்களித்திருந்த ஒரு கோடியே 50லட்சம் டாலர் கடனுதவியை 8 கோடி டாலராக உயர்த்தியது. அதே போல், ஏனைய கிழக்கு ஐரோப்பிய நாடுகளும் 2 கோடி டாலர் கடனுதவி அளிக்க போவதாகக் கூறின.

## ஆகஸ்டு

ஜனாதிபதி அலெண்டே வெளிநாடுகளுக்கு சுற்றுப்பயணம் செய்கிறார், சிலி நாட்டுக்கும் சில அண்டை நாடுகளுக்கும் மிடையே இருந்த பிரச்சினைகளை தீர்க்கிறார். அவ்வெளிநாடுகளில் செய்த பிரசங்கங்களில் தன் நாட்டின் அரசியலை ஏனைய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் போவதில்லை என்று கூறுகிறார்.

## ஆகஸ்ட் 12

தேசியமயமாக்கப்பட்ட எல்சால்வடார் பிரதேசத்திலுள்ள செம்புச்சுரங்கத் தொழிலாளர்கள் கிறிஸ்துவ ஜனநாயக கட்சியின் தலைமையை ஏற்றுள்ளவர்கள், இவர்கள் ஒரு வேலை நிறுதம் செய்கிறாகள், இவர்களுக்கு 33 சதவீத சம்பள உயர்வு கொடுக்க அரசாங்கம் ஒப்புக்கொள்கிறது. இதை, அலெண்டேயை ஆதரித்த சீர்திருத்தக் கட்சிகள் எதிர்க்கின்றன அமைச்சரவையைவிட்டு வெளியேறுகின்றன, இதன் பிறகு அமைச்சரவை திருத்தியமைக்கப்படுகிறது,

## 1972· ஜனவரி

இதற்கு முந்திய ஓராண்டுகாலத்தில் குறைந்த சம்பளம் பெற்றுவந்த பலதரப்பட்ட தொழிலாளர்களுக்கு கணிசமான சம்பள உயர்வு கிடைத்தன. தேசிய வருமானத்தில் 1970-ல் 51 சதவீதம் பெற்று வந்த தொழிலாளர்களின் சம்பள விகிதம 1971-ல் 59 சதவீதமாக உயர்ந்தது,

இதன் விளைவாக பண்டங்கள் உபயோகிப்போரின் தேவைகள் அதிகரித்தன. அத்தியாவசிய பொருட்களின் உற்பத்தி 8 சதவீதத்திலிருந்து 14.6 சதவீதமாக உயர்ந்தது. அதே சமயத்தில் 1971-ல் 20 சதவீதமாக விலைவாசிகள் உயர்ந்தன. எனினும், தொழிலாளிகளுக்கு கிடைத்த சம்பள உயர்வின் காரணமாக, மக்களின் வாங்கும் சக்தி அதிகரித்து, பல தொழிற்சாலைகளின் உற்பத்தி மிகஅதிகமாக அதிகரித்தது, அதன் காரணமாக சாண்டியாகோ மாகானத்தில் மட்டும் 65 ஆயிரம் பேருக்கு புதிதாக வேலைகள் கிடைத்தன,

புதிதாக, தொழில்கள் ஆரம்பிக்கப்படாவிடினும் நாடெங்கும் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. ஏழை நடுத்தர மக்கள் முன்னிருந்ததைவிட அதிக வருமானம் பெற்று நல்ல உணவும் போதிய ஆடையும் கல்வி, சுகாதார வசதிகளும் பெற்ற நிலைமை ஏற்பட்டது.

## மார்ச்

அமெரிக்காவில் ஜாக்ஆண்டர்ஜென் என்னும் பத்திரிக்கையாளர் உலகமே அதிர்ச்சியடைந்த ஒருமர்மத்தை வெளியிட்டார்.

சர்வதேசிய டெலிபோன் டெலிகிராப் என்ற பிரமாண்டமான அமெரிக்கக் கம்பெனி சிலி நாட்டில் பல ரகமான தொழில்களில் மூலதீடு செய்திருந்தது. இவைகளை, அலெண்டே அரசாங்கம் தேசியமயமாக்கிய பிறகு அந்த அரசை கவிழ்க்க திட்டமிட்டு பல சதிவேலைகள் செய்து வருகிறது இதற்கு, அமெரிக்க உளவு இலாகாவான சி ஐ. ஏ. உதவி செய்கிறது இது பற்றிய முழு விபரங்களையும் ஜாக் ஆண்டர்ஜென் அமெரிக்க பத்திரிகைகளில் வெளியிட்டு வந்தார்.

இது உலகெங்கும் பரபரப்பை உண்டாககியதுடன் அமெரிக்க செனட்டும் இதுபற்றி விவாதித்தது ஆனால், எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

## மார்ச் 22

மேற்கூறிய நிகழ்ச்சிக்கு பிறகு சிலி அதிபர் அலெண்டே எதிர்க்கட்சியான கிறிஸ்துவ ஜனநாயக் கட்சியை அழைத்துப் பேசினார். அந்தக் கட்சியுடன் சமரசம் செய்து கொள்ள முயற்சித்தார்.

மாற்றுக் கட்சிகள் பெரும்பான்மையாக உள்ள பார்லிமெண்டில். அலெண்டேயின் அரசாங்கம் கொண்டுவந்த எந்த மசோதாவும் நிறைவேற்றப்படாமல்இருந்ததற்கு ஒரு தீர்வுகாணவே இச்சமரச முயற்சி. ஆனால் இச் சமரச முயற்சி வெற்றி பெறவில்லை.

## ஏப்ரல்

மேற்கத்திய நாடுகளைக் கொண்ட பாரிஸ் கிளப் என்ற முதலாளித்துவ கூட்டு நிறுவனத்திற்கு சிலி கொடுக்க வேண்டிய 373 கோடி டாலர் கடனைப் பற்றி பேச்சு வார்த்தை நடத்தி ஒருமுடிவு காண முயற்சி செய்கிறார் அலெண்டே,

அமெரிக்க நிர்ப்பந்தத்தின் காரணமாக இம்முயற்சி வெற்றி பெறவில்லை. அமெரிக்க நிர்ப்பந்தத்தின் காரணமாக சர்வதேசிய நிதி நிருவனத்தின் கடன் உதவியும் கிடைக்கவில்லை.

சர்வதேசிய நிதிநிறுவனத்தின் கடன் கிடைக்கவேண்டுமானால் சிலி நாட்டு தொழிலாளர்களுக்கு சம்பளம் கொடுப்பது பற்றியும், ஏற்றுமதி, இறக்குமதிகள் குறித்தும அந்நியநிதி நிறுவனத்துடன் ஒரு உடன்பாடு காணவேண்டுமென்று கோரப்பட்டது. ஒரு நீண்ட பேச்சு வார்த்தைக்குப் பிறகு, அந்நிறுவனத்துடன் சமரசமும் செய்து கொண்டது.

## மே

அலெண்டே அரசாங்கத்தின் கீழ் செயல்பட்ட போலீஸ் சில கட்டுக்கடங்காத வேலைகளில் ஈடுபட ஆரம்பித்தன. அமைதியாக ஆர்ப்பாட்டம் செய்த நிராயுதபாணிகளின் மீதும் விவசாயிகள் மீதும் அவர்கள் குழந்தைகள் மீதும் போலீசார் துப்பாக்கி பிரயோகம் செய்தனர்.

இடதுசாரிக் கட்சிகளுடன் மோதல் நடத்திய வலதுசாரி ஆர்ப்பாட்டக்காரர்களுக்கு போலீசார் பாதுகாப்புக்கொடுத்தனர்.

இதே சமயத்தில், கான்செப்சியான் என்ற தெற்கு மாநிலத்தில் செயல்பட்ட எம். ஐ ஆர். ஆதரவாளர்களுக்கும் சிலி கம்யூனிஸ்ட் கட்சியினருக்குமிடையே சில கைகலப்புகள் நடைபெற்றன.

## ஜூலை 26

ஆதிவாசிகள் நிறைந்த தெற்குமாகாணமான கன்சப்சியான் மாகாணத்தில் எம். ஐ ஆர். என்ற இயக்கம் மக்கள் சட்டசபையை அமைத்துள்ளதாக அறிவிக்கிறது.

## செப்டம்பர்

சிலி நாட்டின் தூதுவர் ஐ நா. சபையில் அமெரிக்க நாட்டின மீது பல குற்றச்சாட்டுகளை சுமத்துகிறார். சிலி நாட்டின் மீது பல நிர்ப்பந்தங்களையும் கட்டுப்பாடுகளையும், பொருளாதார முற்றுகைகளையும் நடத்தி சிலியினை முடமாக்க அமெரிக்கா சதிசெய்வதாக குற்றஞ் சாட்டுகிறார்.

## அக்டோபர்

முதலாளிகள் வேலை நிறுத்தம் நடத்துகிறார்கள், பல சிறு தொழில் நடத்துவோர், கடைக்காரர்கள், கப்பல் தொழிலில் ஈடுபட்டுள்ளோர், லாரி முதலாளிகள் ஆகியோர் வேலை நிறுத்தம் செய்கின்றனர். இந்த வேலை நிறுத்தம் 20 நாட்களுக்கு தொடர்கிறது. எனினும் அவர்கள் முயற்சி வெற்றி பெறவிலலை. சிலி நாட்டின் தொழிலாளி வர்க்கம் அலெண்டேயின் பின்னால் அணிதிரளுகிறது. எனினும் அவர் மேற்கூறியவர்களோடு உடன்பாடு செய்துகொள்கிறார். இதற்கு ராணுவத்தினரைப்பயன் படுத்திகொள்கிறார இதன் முடிவில் ராணுவ அதிகாரிகளையும தன்னுடைய அமைச்சரவையில்சேர்த்துக் கொளகிறார்,

## 1973 மார்ச் 4

சிலியின் நாடாளுமன்றத்துக்கு தேர்தல் நடைபெறுகிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு 36·3 சதவீதமே பெற்றிருந்த அலெண்டேயின் கூட்டணி இந்த நாடாளுமன்றத் தேர்தலில் 44 சதவீதம் பெறமுடிந்தது, எனினும், கிறிஸ்துவ ஜனநாயகக் கட்சியும் ஏனைய பிற்போக்கு கட்சிகளுந்தான் நாடாளுமன்றததில் மெஜாரிட்டி பெற்றிருந்தன,

## ஜூன் 5

சிலி நாட்டின் உயர்நீதிமன்றம் அனிபால் பால்மோ என்ற சிலி அமைச்சர் மீது ஒரு வழககுத் தொடக்க முன் வந்தது இவ்வாறு அரசாங்க அமைச்சர்கள் மீதே வழக்குத் தொடர முன்வந்தபோது அலெண்டே அரசாங்கம் சிலி நாட்டின் நீதிபதிகள் 13 பேர் மீது நாடாளுமன்றத்தில் ஒரு கண்டனத் தீர்மானம் கொண்டு வந்தது, இந்தக் கண்டனத் தீர்மானத்திற்கு நாடாளுமன்றம் ஒப்புதல் அளிக்கவில்லை யென்றாலும் சிலி நாட்டின் தொழிலாளி வர்க்கம், ஏனையஉழைப்பாளி மக்கள் அலெண்டே அரசாங்கத்திற்கு ஆதரவாக பொது வேலை நிறுத்தம் செய்தன,

## ஜூன் 29

அரசாங்கத்தை ஆதரித்தும், எதிர்த்தும் கிளர்ச்சிகள் நடந்துகொண்டிருந்த சமயத்தில் சிலியிலுள்ள பாசிஸ்ட் ஸ்தாபனத்தின் தூண்டுதலின் பேரில் ஒருடாங்குப் படையொன்று தலைநகரான சாண்டியாகோவில் உள்ள ஜனாதிபதி மாளிகை மீது படையெடுத்தது. இந்தப் படையெடுப்பு முறியடிக்கப்பட்டது.

## ஜூலை 4

எனினும் இந்நிகழ்ச்சிக்குப் பிறகு' அலெண்டேயின் 15 உறுப்பினர்களைக்

(4-ம் பக்கம் பார்க்க)

---

ஆசிரியர் கூட்டணியின்

## மாநில செயற்குழு-பொதுக்குழுவை கூட்டவும்

### மாநில செயலாளருக்கு வி. ராமுண்ணி அவசரக்கடிதம்

சென்னை, அக், 4—

தமிழ்நாடுதொடக்கபள்ளி ஆசிரியர் கூட்டணியின் மாநில செயற்குழு, பொதுக் குழுக்களின் அவசரக் கூட்டங்களைக் கூட்ட வேண்டும் என்று அக்கூட்டணியின் நிறுவனர் தோழர் வி ராமுண்ணி வற்புறுத்தியுள்ளார்,

அவர் கூட்டணியின் மாநிலம் பொதுச் செயலாளருக்கு எழுதியுள்ள அவசரக் கடிதம் ஒன்றில் இவ்வாறு வற்புறுத்தியுள்ளார்.

அக்கடிதத்தில் கீழ்வரும் பிரச்சினைகள் நிகழ்ச்சி நிரலில் முக்கிய இடம் பெற வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளார்

தேவகோட்டை ஆசிரியர்களின் உண்ணாவிரதப் போராட்டம், பஞ்சாயத்து யூனியன்களில் ஆசிரியர்களைப் பழிவாங்கும் நோக்கத்துடன் நடத்திய மாறுதல்கள், பஞ்சப்படி உயர்வு, மருத்துவப் படி வழங்குதல், பல இடங்களில் அப்ரண்டிஸ் ஆசிரியர்களுக்கு 'அட் ஹாக் இன்கிரீஸ்' வழங்காதது சென்னை நகரில் உறுப்பினர்களைச் சேர்க்காதது ஆகியவை.

இக்கோரிக்கைகள் மிக அவசரமென தான் நினைப்பதாகவும் எனவே உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் தனது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

---

ஒட்டன் சத்திரத்தில்

## 3 பைசா கூலி உயர்வு தர தரகு மண்டி முதலாளி மறுப்பு மூடை சுமக்கும் தொழிலாளர் வேலை நிறுத்தம்

ஒட்டன்சத்திரம்,அக்4—

இங்குள்ள தாராபுரம் ரோடிலுள்ள அங்குச்சாமி செட்டியார் வெங்காய தரகு மண்டியில் பணிபுரியும பெண்கள் உட்பட அனைத்து கலாஸ் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி கடந்த செப்டம்பர் 13-ந் தேதிமுதல் தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

இவர்களது கோரிக்கை கூலியை 3 பைசா உயர்த்திதர வேண்டும் என்பதே.

கடந்த 7 வருடங்களாக வேலை செய்துவரும் இவர்களுக்கு ஒட்டன்சத்திரம் கடை வீதியில், வேறுகடைகளில் வேலை செய்பவர்களை காட்டிலும், கூலி மிகக் குறைவாகத்தான் —மூடை இறக்குவதற்கு 4 காசு தான் கொடுக்கப்படுகிறது.

எனவே, இந்த தொழிலாளிகள் ஒன்று சேர்ந்து மற்ற பகுதிகளிலும் வேலை செய்பவாகளை கூப்பிட்டு, பல மாதங்களுக்கு முன்பாகவே சங்கம் வைததனர்.

நாள்தோறும் உயர்ந்துவரும் விலைவாசி உயர்வில வாழ்க்கையை சமாளிக்கமுடியாத தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரிக்கையை முன்வைததார்கள்.

கடையில் உள்ள பெரிய கணக்குபிள்ளையிடம் கூறினாகள் அவர் 'செட்டியாரிடம் கூறுகிறேன்' என்றாராம். மறுநாள் கூப்பிட்டு, நீங்கள் கேட்கும் கூலி கொடுக்க முடியாது. பழைய கூலி தான், இஷ்டமிருந்தால் வேலை செய்யுங்கள், என்றாராம்.

இதே செட்டியார், விவசாயிகளிடம், மூடை இறக்க, தைக்க என்று, அவர்கள் வெங்காயம்விற்ற பட்டியலில், மூடை 1-க்கு 15 காசு கலாஸ் கூலி போட்டு வாங்குவாராம்,

இந்த அநியாயத்தை எதிர்த்தும், வெங்காயம, இறக்க மூடை 1-க்கு 7 பைசா கூலி கோரியும் மற்றும் பல கோரிக்கைகளை வற்புறுத்தியும் செப், 3-ம் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

லேபர் ஆபீஸர், லேபர் இன்ஸ்பெக்டா் ஆகியோர்களுக்கு தந்திகள் கொடுக்கபபட்டன. பதில் ஏதுமில்லை.

மீண்டும் சங்க நிர்வாகஸ்தர்கள் கூடி, கோரிக்கையை பொதுமக்களுக்கு தெரியப்படுத்த, செப். 21-ந் தேதி ஒட்டன் சத்திரத்தில் ஆர்ப்பாட்டமும், 24-ந் தேதி பொதுக்கூட்டமும், 25-ந் தேதி வெங்காய தரகுமண்டி முன்பு ஒருநாள் உண்ணாவிரத போராட்டமும், நடத்தினார்கள். மீண்டும், எல்லா அதிகாரிகளுக்கும் தந்திகள் கொடுககப்பட்டன.

29—9—73-ம் தேதி திண்டுககல்லில் வாய்தா போடப்பட்டது. நிர்வாகத் தரப்பில் யாரும் வராததால் வாய்தா ஒத்தி போடப்பட்டுள்ளது

மீண்டும் சங்க நிர்வாகஸ்தர்கள் கூடி. ஒட்டன்சத்திரத்தில் உள்ள சகல அரசியல் கட்சிகளின் ஆதரவுடன்,சகோதாசங்கங்களின் ஆதரவுடன் தொடர்ந்து போராடுவது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

---

இரயில்வே நிர்வாகத்துக்கு

## மணியாச்சி டி. ஆர். இ. யூ. கண்டனம்

மணியாக்சி அக். 5—

மணியாச்சியில் ரோலிங் ஸ்டாப் தொழிலாளர்கள் இல்லாததால் அந்த வேலைகளை பாயிண்ட்ஸ்மேனைக் கொண்டு செய்ய ரயில்வே நிர்வாகம நிர்பந்தம் செய்வதற்கு தட்சிண ரெயில்வே எம்ப்ளயீஸ் யூனியன் (டி ஆர் இ யூ) மணியாச்சிகிளை கண்டனம் தெரிவித்துளளது.

இக்கிளையின் கூட்டம் கடந்த 28-ந் தேதி மணியாச்சி ஜங்சனில் நடந்தது தோழர் பி. இசக்கித் தேவர் தலைமை வகித்தார்.

தோழர்கள் பி, சுப்பையா (தூத்துக்குடி கிளைச் செயலாளர்), எஸ், ராஜாமணி (மின் குழு ஊழியர்கள் சங்கம்), சு. பாலவிநாயகம் (சங்க ஆலோசகர்) ஆகியோர் பேசினர்.

இக்கூட்டத்தில் மத்திய அரசு ஊழியர்களின் நான்காம் வகுபபு ஊழியர்களுக்கு குறைந்த பட்ச ஊதியம் மாதத்திற்கு ரூ 314 வழங்க வேண்டும் என்றும், விலைவாசி உயர்வுக்கேற்ப முழுப் பஞ்சப்படியை வழங்க வேண்டுமென்றும், ரயில்வேயில் பணிபுரியும் அனைத்துத் தொழிலாளர்களுக்கும் 8 மணி நேர வேலைக்கு உத்திரவாதம் வழங்கவேண்டுமென்றும் அனைத்துகேசுவல் தொழிலாளர்களையும் நிரந்தரமாக்க வேண்டுமென்றும் வருடத்திற்கு ஒரு மாதச் சம்பளம் போனஸ் வழங்க வேண்டுமென்றும். மணியாச்சியில் இன்னும் ஒரு பெர்மனட் கேங் போட வேண்டுமென்றும், இ எல் ஆர் தொழிலாளர்களின் சினியாரிட்டி லிஸ்டை பி என் ஐ ஆபீஸ் நோட்டீஸ் போர்டில் ஒட்டவேண்டுமென்றும், அனைத்து இ எல் ஆர் தொழிலாளர்களுக்கும் வேலைக்கு செல்வதற்கு இ டி பி பாஸ் வழங்க வேண்டுமென்றும் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

கண்ணுடிப்புத்தூர்

# விவசாய தொழிலாளர் போராட்டம் வெற்றி

உடுமலை, அக். 5—உடுமலைத் தாலுகா எஸ் கண்ணுடிப்புத்தூர் விவசாயத் தொழிலாளர்களின் கூலி உயர்வுப் போராட்டம் வெற்றி பெற்றது. ஆனால் வடக்கு கண்ணுடிப்புத்தூரில் பெண் தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு தர மிராசுதார்கள் மறுத்து வருவதை எதிர்த்து அப்பகுதியில் போராட்டம் நடக்கிறது.

இப்பகுதிகளில் விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த கூலியே கொடுக்கப்பட்டு வந்தது. இதனை எதிர்த்து செங்கொடிச் சங்கமான விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் கீழ் அணி திரண்டு கூலி உயர்வு கோரிக்கையை முன் வைத்தனர். வயல் வேலைக்கு ஆண்களுக்கு ரூ 3—50-ம், பெண்களுக்கு ரூ 2—25-ம் என கூலி உயர்த்தித் தரவேண்டும் எனவும் மற்ற வேலைகளுக்கும் கூலி உயர்வு தர வேண்டும் என்றும், வேலை நேரத்தை ஆண்களுக்கு காலை 9 மணி முதல் மாலை 5 வரை என்றும், பெண்களுக்கு காலை 10 மணி முதல் மாலை 4 மணி வரை என்றும் நிர்ணயிக்க வேண்டுமென கோரிக்கை வைத்தனர்.

கோரிக்கையை விளக்கி மெகோபோன் மூலம் பிரச்சாரம் செய்யப்பட்டது.

உடனே சிறு நில முதலாளிகள் விவசாயத் தொழிலாளர் பிரதிநிதிகளை அழைத்து ஆண்களுக்கு கூலி உயர்வு தர ஒப்புக்கொண்டனர். ஆனால் பெண்களுக்குத் தர முடியாது என்று பிடிவாதம் செய்தனர்.

இதனால் பெண்கள் 4 நாட்கள் வேலை நிறுத்தம் செய்தனர். இவர்களுக்கு ஆதரவாக அப்பகுதியிலுள்ள 5 ஊர்களைச் சேர்ந்த ஆண், பெண் தொழிலாளர்கள் அனுதாப வேலை நிறுத்தம் செய்தனர்.

உடனே, எஸ். கே. புதூர் கிழக்கு நீலம்பூர், மேற்கு நீலம்பூர், பஸ்பத்தூர், மயிலாபுரம் ஆகிய ஊர்களில் பெண்களுக்கு கூலியை ரூ 2-25 ஆக உயர்த்தித் தர ஒப்புக் கொண்டனர்.

எனவே, அப்பகுதியில் வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டு, வேலைகள் நடந்து வருகின்றன,

ஆனால் வடக்கு கண்ணுடிப்புத்தூரில் மட்டும் சில மிராசுதார்கள் பெண்களுக்குக் கூலி தர மறுத்து வருகிறார்கள். இந்த மிராசுதார்கள் குத்தகை விவசாயிகளாக இருந்து சொந்த விவசாயிகளாக மாறியிருப்பவர்கள் என்றும் நகசலைட்டுகளாக மாறி தற்போது வலது கம்யூனிஸ்டு ஆதரவாளர்களாக மாறியிருப்பவர்கள் என்றும் கூறப்படுகிறது.

தங்களுக்கு கூலி உயர்வு தரும்வரை வேலைக்குச் செல்ல மாட்டோம் என்று தொழிலாளர்கள் உறுதியுடன் போராடுகிறார்கள்.

இவர்களுக்கு விவசாயத் தொழிலாளர் சங்கமும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் ஆதரவளித்து வருகின்றன.

# கம்போடிய பொம்மைக்கு கல்தா கொடு

## கொரியாவில் ஐ.நா. படைத்தலைமையை கலைத்து, ஐக்கியத்திற்கு வழிவிடுக!

### ஐ. நா சபையில் சீனாவின் முழக்கம்

ஐ நா சபை, அக். 5—ஐக்கிய நாடுகள் சபையில் பங்களா தேசத்தை அங்கீகரிப்பதுபற்றி மக்கள் சீனாவின் அயல்துறை உதவி மந்திரி சியோ குவான்—ஹவோ பேசினார்.

ஐ நா சபை தீர்மானங்கள் முழுவதையும் பங்களா தேஷ் அமுல் நடத்தினால் தான், ஐ நா சபையில் பங்களா தேஷை அங்கீகரிக்க முடியும். அதற்கிடையில் அங்கீகரிக்க முடியாது" —என்று சியோ தெரிவித்தார்.

ஐ நா சபை தீர்மானங்களில், யுத்த நிறுத்தம், துருப்புகள் வாபஸ், யுத்தக் கைதிகள் பரிமாற்றம் ஆகிய பிரச்சினைகளில் இந்தியாவும் பாகிஸ்தானும் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று குறிப்பிடப் பட்டுள்ளன.

ஐ நா பொதுச்சபை முன்னால், உலக விவகாரங்கள் குறித்து சீன சர்க்காரின் நிலை என்ன என்பதைப் பற்றி சீனப் பிரதிநிதி விளக்கினார்.

#### இந்தியா-பாக் உடன்பாடு

இந்தியாவும் பாகிஸ்தானும் செய்துகொண்ட உடன்படிக்கையை சீனப் பிரதிநிதி வரவேற்றார். இது பற்றி அவர் குறிப்பிடுகையில் "உடன்படிக்கையானது ஏட்டளவில்தான் இருக்கிறது அது நடைமுறை யதார்த்தமாக உருப் பெற வேண்டும்"—என்றார். "படிப்படியாக அமுல் நடத்தும்போது, பல சிக்கல்கள் எதிர்ப்படுவதற்கும் சங்கர்ப்பம் இருக்கத்தான் செய்கிறது" என்றும் சுட்டிக் காட்டினார்.

#### கம்போடியா

கம்போடியாவின் நிலைமை பற்றி பேசுகையில் "கம்போடியாவில் பொம்மை சர்க்காரின் தலைவனாக உள்ள லான்நாலின் ஆட்சியினை அமெரிக்க சர்க்கார் தொடர்ந்து ஆதரித்து வருவதை சீனப் பிரதிநிதி கண்டித்தார்.

இப்பொழுது நடைபெற்றுக்கொண்டிருக்கும் இந்த ஐ நா பொதுச்சபைக் கூட்டத்திலேயே லான்நால் சர்க்காரின் பிரதிநிதிகளை ஐ. நா மன்றத்தை விட்டு வெளியேற்றி விடுவது என்று முடிவு எடுத்துவிட வேண்டும். அந்த இடத்தில் இளவரசர் நரோதம் சிகனூக் ஆட்சியின் பிரதிநிதியை அமர்த்த வேண்டும்" என்று வற்புறுத்தினார்.

#### கொரியா ஒற்றுமைக்கு

கொரியாவைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'கொரியா நாட்டின் வடபகுதியும், தென்பகுதியும், ஐக்கியமாக வேண்டும். சமாதானமுறையில் மீண்டும் ஒன்றுபடுவதற்கான நல்ல சூழ்நிலைகளை உண்டு பண்ண வேண்டும். கொரிய ஐக்கியத்திற்கான நல்ல சூழ்நிலை ஏற்பட, தென் கொரியாவில் உள்ள ஐ.நா படைத் தலைமையைக் கலைத்துவிட வேண்டும்"—என்றும் சீனப் பிரதிநிதி வற்புறுத்தினார்.

தென் கொரியா, வட கொரியா ஆகிய இரு கொரிய அரசுகளையும், ஐ நா சபையில் அங்கீகரிப்பது என்ற அமெரிக்கக் கொள்கையை சீனா வன்மையாகக் கண்டித்தது.

இப்படிச்செய்தால்கொரியாவை என்றுமே பிளவுபடுத்தி — ஒன்றுக்கொன்று எதிராளிகளாக நிறுத்திவிடுமென்றும். எனவே இந்த நாசகார திட்டத்தை ஏற்க முடியாதென்றும் கூறினார்.

#### மேற்கு ஆசியா

மேற்கு ஆசியப்பிரச்சினைகளைப் பற்றி குறிப்பிடுகையில், அரபு மக்கள் தாங்கள் இழந்த பிரதேசங்களை, இஸ்ரேலிடமிருந்து மீட்பதற்கு நடத்தும் போராட்டத்தை சீனா ஆதரிப்பதாகவும், "சமாதானமுமில்லாமல் சண்டையும் இல்லாமல்" அரபு நாடுகளும், இஸ்ரேலும் எதிரும் புதிருமாய் நிற்பது மிகப் பெரிய வல்லரசுகளின் நலன்களுக்கே உகந்ததாக உள்ளது என்று சீனப்பிரதிநிதி குறைகூறினார்.

ஆசியாவுக்கு கூட்டுப் பாதுகாப்புஎன்றகொள்கையையும் சீனப் பிரதிநிதி கண்டித்தார்,

ஆப்பிரிக்க மக்களையும் லத்தீன் அமெரிக்க மக்களையும் காலனியாதிக்கவாதிகளும், நிறவெறியர்களும் அடக்கி ஒடுக்குவதையும் வன்மையாகக் கண்டித்தார்.

## நடக்க இருப்பவை

**எப்போதும்வென்றானில் மின் தொழிலாளர் கோரிக்கை விளக்க பொதுக்கூட்டம்**

நாள்: 10—10—73ந் தேதி இரவு 7 மணிக்கு

இடம்: மணி மண்டப மைதானத்தில்

பேசுவோர்கள்

தோழர்கள்
சு பாலவிநாயகம்
பி சி வேலாயுதம்
சந்தன மாரியப்பன்
பொன்னுச்சாமி
சீனிவாசன்
பி சுப்பையா

மற்றும் மின் ஊழியர் சங்க தோழர்களும் பேசுவர்.

குடந்தை, பழனி

# டான்சி தொழிலாளர் வேலை நிறுத்தம்

கும்பகோணம், அக். 5—தமிழ்நாடு சிறு தொழில் நிறுவனத்தைச் சார்ந்த தொழிலாளர்கள் கடந்த 1-ந் தேதியன்று தங்களது 17 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி மாநில ரீதியில் பொது வேலை நிறுத்தம் செய்தனர்.

அன்று, குடந்தையில் உள்ள இரும்பு அண்ட் பித்தளைத் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் ஒருவரும் வேலைக்குப் போகாமல் வேலை நிறுத்தம் செய்தனர். கேட் முன்பு அனைத்துத் தொழிலாளர்களும் கூடி தங்களது 17 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி முழக்கங்கள் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

**பழனியில்**

இங்குள்ள அரசின் சிறு தொழில் நிறுவனத் தொழிலாளர்கள் அனைவரும் வேலை நிறுத்தம் செய்து 17 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தினர். ஐ என் டி யூ சி சங்கத்தைச் சேர்ந்த 5 பேர் மட்டும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்ளவில்லை.

## மண்டபம் ஆசிரியர்கள் அவதி

மண்டபம், அக். 6—மண்டபம் ஊராட்சி ஒன்றியத்தில் ஆசிரியர்கட்கு இதுவரை தீபாவளி முன்பணம் வழங்கவில்லை. மற்ற அரசு ஊழியர்கள் ரூ 200 வீதம் விழா முன்பணம் பெற்றுவிட்டனர். ஆசிரியர்கட்கு மட்டுமே இந்த அவல நிலை ஏற்பட்டுள்ளது மாதாமாதம் சம்பளம் வழங்குவதிலும் இதே நிலைதான் நீடிக்கிறது. இதனால் ஆசிரியர்கள் மிக்க துன்பமும், கவலையும் அடைகின்றனர். இதுசம்பந்தமாக அரசு தலையிட்டு உடன் விழா முன் பணம் கிடைக்கவும் சம்பளம் உரிய காலத்தில் கிடைக்கவும் நடவடிக்கை எடுக்க வேண்டுமென ஆசிரியர் கூட்டணி மாநில இணைச் செயலாளர் மண்டபம் வட்டாரச் செயலாளருமான ஈசுவரன் வேண்டியுள்ளார்.

## தமிழகத்தில்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆப்ரேஷன் வேலையை மேற்பார்வை செய்கிறார்.

இப்படியாக தமிழக அரசின் "இதனை இவனால்இவன் முடிக்கும் என அறிந்து அதனை அவன்கண் விடல்" என்பது, வெற்றுப் பிரச்சாரம் தான் என்பது என்னூர் விஷயம் வெட்ட வெளிச்சமாக்கி விட்டது.

இப்படி பல மாதங்களாக தர்மல் நிலையங்களை வேலை செய்ய வைக்க முடியாத காரணத்தினால், இதன் இழப்பிற்கு ஈடுகட்ட கடந்த ஆகஸ்ட், செப்டம்பரில் நீர் விசையைப் பயன்படுத்த வேண்டி ஏற்பட்டது. இந்த வகையில் மட்டும் ஒரு நாளைக்கு 24 லட்சம் யூனிட் உற்பத்தி செய்ய தண்ணீரை விரயம் செய்ய வேண்டி ஏற்பட்ட தவறுக்கு பொறுப்பு யார்?

எனவே 15 சதம் மின்சார வெட்டு என்பது இயற்கை கோளாறு என்பதையும், தவிர்க்க முடியாது என்பதையும் பொது மக்கள் ஒரு நாளும் நம்பப் போவதில்லை.

**ஆச்சரியப்பட இடமுண்டா?**

இந்தலட்சணத்தில்தமிழ் நாட்டில் உற்பத்திபகுதிகள் அனைத்தையும் இணைத்து மின்சார அமைச்சர் தலைமையில் ஒரு தனி கார்ப்பரேஷன் ஏற்படுத்தப் போவதாக வேறு அறிவிப்பு வந்துள்ளது. இவ்வளவுக்கும் பிறகு இதே பொறுப்பற்ற போக்கை மத்திய—மாநில அரசுகள் கையாண்டு வருமானால் 100 சதம் மின்வெட்டு வந்தாலும் ஆச்சரியப்பட இடமுண்டா?

## போர்க்கைதிகள் முகாமில் திருமணம்

புதுடெல்லி, அக். 5—இந்தியாவின் பாதுகாப்பில் இருந்து வரும் இரண்டு பாகிஸ்தான் சிவிலியன் பிரஜைகளுக்கு கைதிகள் முகாமொன்றில் அண்மையில் திருமணம் நடந்தது.

அப்ஸார் ஹுசைன் என்ற கைதி, ஷிரா மதச் சடங்குகளின்படி குமாரி அனிஸ் பாதிமாவை மணந்தார்.

கைதி முகாமைச் சேர்ந்த மௌலவி,ஹசன் இமாம் ரிஸ்வி திருமணத்தை நடத்தி வைத்தார்.

## பம்பாயில் எஸ் எப் ஐக்கு வெற்றி

பம்பாய் ஆக. 5—பம்பாய்சயானில் தென் இந்திய கல்வி நிறுவன கல்லூரியில் நடைபெற்ற கல்லூரி பேரவைத் தேர்தலில் இந்திய மாணவர் சங்கம் (எஸ். எப் ஐ) அமோக வெற்றி பெற்றுள்ளது.

மொத்தம் போட்டி நடைபெற்ற 118 இடங்களில் கடுமையான போட்டிக்கிடையே எஸ் எப். ஐ மாணவர்கள் 98 இடங்களை கைப்பற்றினர்.

# உடுமலை போலீசாரின் திமிர்

## மார்க்சிஸ்ட் கட்சி செயலாளரை அடித்துதுன்புறுத்தியகொடுமை

உடுமலை, அக் 5—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் உடுமலை பெரிய வாளவாடி கிளைச் செயலாளர் தோழர் வர்கீசை, தளி போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரும் மற்ற போலீசாரும் முறைகேடாக நடத்தியும் அடித்துமுள்ளதாகச் செய்தி கிடைத்துள்ளது. இது பற்றி கூறப்படுவதாவது:-

கடந்த 1—10—73-ந் தேதியன்று தோழர் வர்கீசை இரண்டு போலீசார் சப் இன்ஸ்பெக்டர் கூட்டி வரச் சொன்னதாகக் கூறி அழைத்தனர். காரணம் கேட்டதற்கு, இரண்டு தினங்களுக்கு முன்பு ஒரு சைக்கிள் திருடு போனதாகவும், அது சம்பந்தமாக சின்ன வாளவாடியைச் சேர்ந்த பழைய கேடியும் திருடனும் ஏலமுத்து நாய்க்கரின் மகனுமான ராமானுஜம் என்பவனைப் பிடித்து வைத்திருப்பதாகவும், மேற்படி சைக்கிளை வர்கீசுக்கு விற்றதாக அவன் சொல்லியுள்ளதால் அது சம்பந்தமாக விசாரிப்பதற்கு சப்-இன்ஸ்பெக்டர் கூப்பிடுவதாகவும் கூறினர்.

அதன்பேரில் தோழர் வர்கீஸ் தளிப்போலீஸ் நிலையத்துக்குச் சென்றார்.

#### மார்பில் குத்தினர்

ஆனால்சைக்கிள் சம்பந்தமாக வக்கீலிடம் விசாரிக்கவில்லை, மாறாக 'வாடா, போடா' என்று கேவலமான வார்த்தைகளில் ஏசியுள்ளார்.கழுத்தைப்பிடித்து நெறித்து கீழே அழுத்தி 'உட்காருடா கீழே' என்று சொல்லி தரையில உட்கார வைத்துள்ளார். சிறிது நேரம் கழித்து ஒரு போலீஸ்காரர் வந்து தோழர் வர்கீசை வெளியே திண்ணைக்கு இழுத்து வந்து அவரது மார்பில ஓங்கி குத்தியுள்ளார். "வாலாட்டுகிறாயா? ஊரில் வைத்திருக்க மாட்டோம். கொன்று விடுவோம்' என்றெல்லாம் பயமுறுத்தியுள்ளார்.

#### மிரட்டல்

மேலும் பலவாறாகக் கெட்ட வார்த்தைகளால் திட்டியுள்ளார். பூட்ஸ் காலை முகத்துக்கு நேராகத் தூக்கி'ஒரேமிதிதான்'என்று கூறி மிரட்டியுள்ளார், சுமார் 2 மணி நேரம் கண்டபடி திட்டோ திட்டு என்று திட்டியும் ஏசியும், பயமுறுத்தியுமுள்ளனர். கடைசியில் ஒன்றும் புரியாத முறையில் ஏதோ எழுதப்பட்ட காகிதத்தில் கையெழுத்துப் போடும்படி அடித்து நிர்பந்தம் செய்து கையெழுத்து வாங்கிய பின்பு 'ஜெயிலுக்கும் போகத் தயாராக இருடா' என்று சப்இன்ஸ்பெக்டரின் மிரட்டலோடு வெளியே அனுப்பியுள்ளனர்-

#### கொதிப்பு

தளி போலீஸ் நிலைய சப்-இன்ஸ்பெக்டர் போலீசாரின் இந்தக் காட்டுதர்பாரையும் திமிரான நடவடிக்கையும் கண்டு மார்க்சிஸ்ட் கட்சித் தோழர்களும் மற்ற அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களும், பொது மக்களும் ஆத்திரமும் ஆவேசமும் அடைந்துள்ளனர். பொதுமக்களுக்குச் சேவை செய்யும் ஒரு அரசியல் பிரமுகருக்கே இந்த நிலை என்றால் சாதாரண மக்களது நிலை என்னவாகும் என்ற கேள்விக் குறி எழுந்துள்ளது.

அரசியல் தூண்டுதலின் காரணமாக மாற்றுக் கட்சியினரைப் பழிவாங்கும் நோக்குடன் தான் போலீசார் இந்த திமிரான நடவடிக்கையில் இறங்கியுள்ளனர் என்று கூறப்படுகிறது

தளி போலீஸ் நிலையத்தின் இந்த அடாவடிப் போக்கு குறித்து உயர் அதிகாரிகளுக்கு மார்க்சிஸ்ட் கட்சியின் சார்பில் புகார்கள் எழுதியும் இது வரை எவ்வித பதிலோ நடவடிக்கையோ இல்லை என்றும், இது குறித்து அரசும் அதிகாரிகளும் உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் கட்சிக் கிளைச் செயலாளர் தோழர் என். வெங்கடாசலம் வற்புறுத்தியுள்ளார்,

# சிலி நாட்டில் நிகழ்ந்தவை

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

தொண்ட மந்திரிசபை ராஜினாமாச் செய்தது. தான் விரும்பும் நபர்களை நிலைமையை சமாளிக்க மந்திரிகளாக நியமிக்க அலெண்டேவுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

### ஆகஸ்ட் 9

ஜனாதிபதி அலெண்டே தனக்கு வழங்கப்பட்ட அதிகாரத்தைப் பயன்படுத்தி 3 ராணுவப்படைகளின் தளபதிகளையும் ஒரு போலீஸ்படை அதிகாரியையும் தன்னுடைய மந்திரிசபையில் உறுப்பினராக்கிக் கொண்டார்.

### ஆகஸ்ட் 23

இவ்வாறு மந்திரியான கார்லோஸ்பிராட்ஸ் என்ற தளகர்த்தர், அலெண்டேயின் சோசலிஸ்ட் கருத்துக்களை ஏற்றுக் கொள்பவர் என்றும் அவர் வெளியேற்றப்பட வேண்டும் என்றும் வலதுசாரி கட்சிகள் கிளர்ச்சி செய்தன. இக் கிளர்ச்சிக்கு பணிந்து தளகர்த்தர் பிராட்ஸ் ராஜினாமாச் செய்தார்.

அவர் ராஜினாமாச் செய்த பிறகு அந்த இடத்திற்கு ஆகஸ்டோ பினோசேட் என்ற தலைமைத் தளபதி மந்தியாக்கப்பட்டார். (இந்த தளகர்த்தர்தான், ஜனாதிபதி அலெண்டேயை சுட்டுக் கொன்று இன்று ராணுவ சர்வாதிகாரியாகி இருப்பவர்)

### ஆகஸ்ட் 30

மீண்டும், போக்குவரத்து முதலாளிகள் வேலை நிறுத்தத்தில் இறங்குகிறார்கள், பொருளாதாரம் பாதிக்கப்படுகிறது. விலைவாசிகள் உயர்கின்றன. இந்த முதலாளிகளின் போராட்டம் 25 நாட்கள் நீடிக்கின்றது, இதைச் சமாளிக்க அரசாங்கம் எந்தத் தீவிர நடவடிக்கைகளிலும் இறங்க வில்லை.

### செப் 4 :

இப்படிப்பட்ட நிலைமையிலும் அலெண்டேயின் ஆதரவாளர்கள், தொழிலாளிவர்க்கம் ஏனைய உழைக்கும் மக்கள் பல்லாயிரக் கணக்கில் திரண்டு தங்கள் அரசாங்கத்தை பாதுகாக்கப் போவதாக முழங்குகிறார்கள். 4 மணி நேரம் ஆதரவு ஆர்ப்பாட்டம் நடத்துகிறார்கள்; அந்த ஆர்ப்பாட்டத்தின்போது அலெண்டே குறிப்பிட்டார் தன்னுடைய அரசாங்கம் பயங்கரமான சதியை எதிர்நோக்கியிருப்பதாகவும் தன்னுடைய ஆதரவாளர்கள் உஷார்த்தன்மையுடன் இருக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்,

### செப். 9

ஜனாதிபதி அலெண்டே தன்னுடைய மந்திரியும் ராணுவத தளகர்த்தருமான பினோசெட்டை அழைத்து கலந்தாலோசிக்கிறார்.

அதே சமயத்தில் விமானப்படைசார்பாக அறிக்கையொன்று விடுகிறது. அந்த அறிக்கையில், ராணுவ நடவடிக்கைகளை குறிக்கோளாகக்கொண்டு பல தொழிற்சாலைகளில் உள்ள தொழிலாளர்கள், ஆயுதம் தாங்கி, தங்கள் அரைகுறை ராணுவ பாணி வேலைகளில் ஈடுபட்டு விட்டதாக அவ்வறிக்கை கூறுகிறது.

சோசலிஸ்ட் கட்சியின் செயலாளரான அல்டாமிரானோ என்பவர் எச்சரிக்கைவிடுகிறார். "சிலியில் ராணுவம் அதிகாரத்தை கைப்பற்றுமானால் சிலி நாடு மற்றொரு வியட்நாமாக மாறும்" என்று எச்சரிக்கிறார்.

### செப். 11

அலெண்டே அமைச்சரவையில் மந்திரியாக இருந்த ராணுவ தளகர்த்தர்பினோசெட்டும் ஏனைய இருவரும் பிரதமபோலீஸ அதிகாரியும் சேர்ந்துகொண்டு ஜனாதிபதி மாளிகையை முற்றுகையிட்டு அலெண்டேயை சுட்டுக் கொன்று அதிகாரத்தைக் கைப்பற்றுகின்றனர். இந்த ராணுவக் கோஷ்டியின் தலைவன் ஜெனரல் பினோசெட்.

## வருந்துகிறோம்

மதுரை, அக். 5—மதுரை நகர் 35-வது வார்டு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர் பிச்சை கடந்த 3-10-73-ந் தேதி இரவில் காலமானார்.

கட்சியின் 33-வது கிளைக் கூட்டம் நடந்து கொண்டிருக்கும் போது, தோழர் பிச்சையின் மறைவு செய்தி கிடைத்ததும் கூட்டத்தில் மௌனம் அனுஷ்டித்து அஞ்சலி செலுத்தப்பட்டது.

கூட்டம் முடிந்தவுடன் கிளை சார்பில் தோழர் பிச்சைக்கு நகர்க்குழு உறுப்பினர் தோழர் வி. வீரபத்திரன் மாலை அணிவித்து இறுதி மரியாதை செலுத்தினர்.

தோழர் பிச்சை தனது தளர்ந்த வயதிலும் இறுதி வரை கட்சி இயக்கத்துக்கு தொடர்ந்து ஒத்துழைப்பு நல்கி வந்தார்.

விஜயலட்சுமி மில் பங்குதாரரின்

# மறுப்பு அறிக்கைக்கு எம். நஞ்சப்பன் பதில்

கோவை, அக். 5—இங்குள்ள விஜயலட்சுமி மில் தொழிலாளர்பிரச்சினை குறித்து கோவை மாவட்ட மில் தொழிலாளர்கள் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் எம். நஞ்சப்பன் விடுத்திருந்த அறிக்கைக்கு அம் மில்லின் பங்குதாரர் ஒரு மறுப்புஅறிக்கை விடுத்திருந்தார், அந்த அறிக்கையில் உண்மைக்குமாறான விஷயங்கள் உள்ளதாகக் குற்றஞ்சாட்டி, தோழர் நஞ்சப்பன் மற்றொரு அறிக்கையினை விடுத்துள்ளார். அந்த அறிக்கை வருமாறு: —

நான் 24—9—73-ந் தேதியிட்டு ஒரு அறிக்கை வெளியிட்டதற்கு விஜயலட்சுமி மில் பங்குதாரர்களில் ஒருவரான திரு நமச்சிவாயம் மறுப்பு தெரிவித்துள்ளார். அவருடைய மறுப்பு அறிக்கையை "அலையோசை" 1-10-73 இதழில் வெளியூர் 2-10-73 பார்த்தேன். அதில் அவர் கூறியுள்ள கருத்துக்கள் முற்றிலும் உண்மையைத் திரித்து கூறுவதாகும்.

கிளீனிங் கேங் வேலைகள் குறித்து இந்த மில்லில் தொழிற் தகராறு ஏற்பட்டுள்ளது. இந்தத் தகராறு குறித்துச் சங்கத்துடன் அல்லது லேபர் ஆபீஸில் வந்து பேச வேண்டும்' இதுதான் நேர்மை, இதை விடுத்து, தொழிலாளர்களை பிளவுபடுத்தவும், குறிப்பாக சிஐடியூ சங்கத்தை நிராகரிக்கவும் ஆன உள்நோக்கத்துடன், தொழிலாளர்களிடம் நான் பேசுவதாகவும், பேசி உள்ளதாகவும் கூறுகிறார், உண்மையை மறைக்கவே இக்கருத்துக்களை கூறியுள்ளார்,

மேலும், மிஷின்களை நவீனப் படுத்துவதால் கிளீனிங் கேங் தொழிலாளர்களை வேறு இலாகாவிற்கு மாற்றுவதாகக் கூறுவதும் தவறாகும். உண்மைக்கு மாறானதும் ஆகும். ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டில் நவீனப் படுத்துவதற்கு, கிளீனிங் கேங்கில் எவ்வித மாற்றமும தேவையில்லை, இப்படி எந்த ஒரு பஞ்சாலையிலும் நடக்கவில்லை, கிளீனிங் கேங் தொழிலாளர்கள், நிர்வாகத்திற்கு சாதகமான சங்கத்திலிருந்து,விலகி சி ஐ டி யூ சங்கத்தின்மூலம் நியாயத்தை கேட்டதற்கு 20 தொழிலாளர்கள் சஸ்பெண்டு செய்யப்பட்டனர், இதுதான் இந்தத் தகராறில் உள்ள உண்மை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு தனது அறிக்கையில் தோழர் நஞ்சப்பன் கூறியுள்ளார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.